உ

ஸ்ரீ சிவாயநம:

# சுவாநுபூதிரஸாயனம்.

இஃது

திருநெல்வேலியைச்சார்ந்த கோடகநல்லூர்
திவ்யதேஜோமயானந்தஸ்வரூபிகளான
சுந்தரஸ்வாமிகள்
அருளிச்செய்தது.

---

திருநெல்வேலி
அகிலாண்டகோடிபிரமாண்டநாயகியாகிய
ஸ்ரீகாந்திமதியம்பாள் சந்நிதித்தெருவில்
ம-௱-௱-ஸ்ரீ
சதாசிவத்திருவடியாரவர்கள்
கேட்டுக்கொண்டபடி



புதுக்கோட்டை சமஸ்தானம்
ஸ்ரீ-பிரஹதம்பாள் விலாச அச்சுக்கூடத்தில்
மாநேஜர். ஈ. குண்டுராயரவர்கள்
உத்திரவின்படி
ஏட். அரங்கசாமிநாயகரவர்களால்
பதிக்கப்பட்டது

1866.

PRICE SIX ANNAS.

(சாற்றுக்கவிகள்.)

இஃது,

திருநெல்வேலி சிவபக்தசிரோமணியாகிய
புராணிகர் - சண்முகம்பிள்ளையவர்கள்பாடிய
விருத்தம்.

தெண்டிரைவளாகத்தறமுறைநாவார்......*
தில்லைவாழந்தணர்முதலாந்...........*
தொண்டரோரறுபான்மூவர்களுடனே....*
சுந்தரஸ்வாமியைச்சேர்த்து..........*
எண்டகுமறுபானல்வராயியம்ப..........*
லேற்றமுள்ளோர்கடனவனே..........*
வண்டமிழதனுற்பத்திப்பிரக...........*
ரணமுதல்வழுத்தினன்மகிழ்ந்தே......*

இவை,

புதுக்கோட்டைசமஸ்தானம்
அருணசலம்பிள்ளைகுமாரன்
சவளிக்கடை - நாராயணபிள்ளைபாடிய
ஆசிரியவிருத்தம்.

நன்னான்குவேதமாறங்கமுடனறுபத்து...*
நான்காங்கலைக்யானமும்... ...........*
நவில்கின்றவேதாந்தசித்தாந்தநூற்கண்முத
னானவிதக்கலைகளுந்..................*
தன்னாலுணர்ந்து மன்னெறிவழாதொழுகி
சாரடியராம்புனிதனாத்...............[யுஞ்
தன்மயமதாக்கிக்கலந்தாளுமுயர்ஞான ...*
சாகரன்குணபூதரன் .....................*

மன்னுதியந்தம்நடுவில்லாதவோர்வஸ்து...※
வளரும்வைராக்யசித்தன்..............※
மாய்கையாகியவுலக வாழ்வனைத்தையும்வெ
மாராஜயோகநித்தன்................[ன்ற
என்னுயகன்விப்பிரச்சுந்தரச்சாமி........※
யென்றவதரித்தபரமன்...............※
இனியவுற்பத்திப்ரகரணமுதலியாவருமெ.※
ளிதிலுணரவருளினனே................※

இதுவுமது.

சீர்மருவும்வேதாந்தசாரத்தையொன்றாய்த்.....※
திரட்டியென்போலறிவிலாச்..............※
சிறியவர்களுந்தெரிந்துய்ரும்நன்னெறியுடன்...※
சின்மயானந்தமேவ.........................※
ஏர்மருவுதமிழினுற்பத்திப்ரகரணமுத........※
லெண்மூன்றுபிரகரணமா.....................※
யிசைத்தசுந்தரஸ்வாமிகட்கிணையதாய்மற்......※
றியாவனாயுமொழியலாமோ...................※
பேர்மருவுமறையவர்குலத்துதித்தரனருட்.....※
பெற்றினியதமிழின்ஞானப்.................※
பெருநூற்கள்பலநவின்றரியவற்புதமகிமை.. ..※
பெருகுமடியவர்களோடும்..................※
பார்மருவிவாதுபுரிபேதகமதங்களைப்........※
பங்கப்படுத்தியென்றும்....................※
பரமமேபெரிதென்றபதமுற்றஞானசம்......※
பந்தர்தமையன்றியாரோ.....................※



சுந்தரசுவாமிகளின் முக்கியமாணாக்கரில்ஒருவராகி
ய-செங்கமாநகர் - வேதாசலமுதலியாரவர்களால்
இயற்றுநின்ற விருத்தப்பாவினம்.

சுத்தமெஞ்ஞானாநந்தச்சுயம்புவோர்வடிவாய்வந்த
வித்தகச்சுந்தரேசர்விளம்பியஸ்வாநுபூதி.... ..[ன்
தத்துவங்கடந்தமோனந் - தரும்ரசாயனத்தைச்சிவ
முத்தரானவரும்யாருமுணர்ந்திடப்புனிதராவார்.※
அலகிலாப்புகழ்கொண்டோங்கு மரும்பரப்பிர
மந்தானே- உலகிலாதவன்போன்மாந்தருளவிருள
கற்றியுண்மை-சொலவருஞ்சுந்தரேசர்ஸ்வாநுபூதி
யையெஞ்ஞானக்-கலைவலாருணருமாறு சுழற்றினர்
கருணையாலே ..............................(௨)
சுந்தரஸ்வாநுபூதி சுகரஸ னயத்தைமேவப்-பந்
தயிடணைசமர்க்கும் பாவனாதுவிதம்போக்கும்-அ
ந்தமில்பேரானந்த வருட்பரஞ்சோதியாய் - சந்
ததமிலகவைக்குஞ் சாக்ஷிதானுக்குமன்றே.....(௩)
தன்னைத்தானுணர்த்தியின்பந் தருங்குருசுவா
நுபூதிக்-கென்னத்தானிணைவேறுண்டு வெழின்மி
குரஸாயனத்தை-யன்னத்தான்மரபில்வந்த வருட்
பெருஞ்சுந்தரேசர்- யன்னத்தான்வடிவங்கொண்ட
பரிசிதென்றனாக்கலாமே....................(௪)
தண்டலைவீசும்பொய்கைத் தனிக்கொடை நல்
லூர்தன்னில்-கண்டவர்கரங்கொண்டேற்றுங் காமர்
பூசுரர்குலத்தில்-அண்டர்நாயகனே யிந்தவருட்சுந்
தரேசனைக்-கொண்டனன் குருவாயக்கோலங் கோ
தில் நூலுணாக்கத்தானே....................(௫)

ஆதிகுருதக்ஷிணாமூர்த்தி-நாராணர்-பிரமன்-வசிஷ்டர்-சக்தி-பாராசரர்-வியாசர்-சுகர்-கவுடபாதர்-கோவிந்தபோகீந்திரர்-சங்கராசாரியர்-பத்மபாதர்-ஹஸ்தாமலகர்-தோடகர்-வார்த்திகக்காரர்-வித்தியாரண்யர்-அப்பயதீக்ஷதர்-நீலகண்டதீக்ஷதர்-அனந்தநாராயணசாஸ்திரிகள்-சங்கரசாஸ்திரிகள்-எங்ஙேசுவரபட்டாரகர்-எங்ஙுஹம்ஸர்-இராமசுப்பிரமண்யபௌண்டரீகர்-சிவசுப்பிரமண்யர்-இராமசந்திரசாஸ்திரிகள்-விசுவேசுவராள்-சுந்தரயதீந்திராள்.※

☞ இவர்களுக்கு உண்மையை யபரோட்சிப்பித்தவுடன் பரிபூரணமாய்விட்ட விசுவேசுவராளுக்கு க்குருபுத்திரர்களான சோமசுந்தரசாஸ்திரிகளால் சற்வவிருத்திபரிசோதனேல்லாச ரஹஸ்யார்த்தமான ஸஹஜஸ்திதி அருள்செய்யப்பட்டது. இவர்களது பூர்வாச்சிரமத்தில் மாதாமகரான சுந்தரேசுவரசாஸ்திரிகளால் ஸ்ரீ-சங்கரபாஷியாதியருள் செய்யப்பட்டது. இந்தவிஷயத்தில், அபரோக்ஷசாக்ஷாத்காரத்தைத்தந்த மஹான்களாகிய விசுவேசுவராளது கருணையால் ஆப்தகாமனாயிருந்திடினும் இவர்கள்பேரிலவர்களது கருணாதிக்கிய விசேஷத்தை இருவர்களின் நாமநிபந்தனரூபமாக இந்தச்சாஸ்திரத்தில்காட்டப்பட்டது. ஸதாசிவப்பிரமத்தின் ஸமாதியிலருள்செய்யப்பட்ட கிர்ஷ்ணராயரவர்கள் இவர்களது ஆப்தசகா, இதுவுமவர்களது கருணை இவர்கள்மீதி லதிகமென்பதைத்தருவித்தலாம்............................※



## கடவுள்வணக்கம்.

ஆதிமத்யாந்தமின்றியகண்டபூரணமாய்ஞானச் ※
சோதியாய்த்துரியபூமிதிகளறுநிலத்தின்மேவுஞ் ※
கோதிலாசைதன்யத்தின்குளிர்மலர்பதங்கள்போற்
றி,ஊதியபச்சுவாநுபூதிரசாயனமுனாக்கின்றேனே

---

### குருவணக்கம்.

அருணிறைந்தபரசிவமே மூன்றுருவானாற்போல்
தடியேனுய்யப்.............................[வந்
பரவியபார்ஷியமுனாத்தசுந்தரசாஸ்திரிகளையும்.※
பரிவாய்ஞானந்.............................※
தருமுயர்விஸ்வேஸ்வராளையுஞ்சகசசமாதிநிலை..※
சாற்றியாண்ட.............................※
குருசோமசுந்தரசாஸ்திரிகளையும் பணிந்துநெஞ்
கொண்டுவாழ்வாம்.........................[சுட்

### அவையடக்கம்.

பந்தமுக்தியறிந்தருள்பக்தர்முன்........※
அந்தமில்ஸ்வாநுபூதிரசாயனம்........※

முந்தையான்மொழிவேனைனல் மூசிகம்...✻
எந்தலோகமுங்காண்டபனென்றேகல்போல்✻

இந்நூற்கதிகாரிகள்.

தாரணியிற்சாஸ்திரங்களனந்தங்கோடி........ ..✻
தனித்தனியேபார்த்துணரச்சக்தியில்லார்க்.....✻
கோரணியாய்த்திரட்டிவைத்தேனிந்நூற்கேற்ற.✻
வுத்தமராமொனினவஸ்தைபொருமூன்றக்கும்...✻
பேரணியாயிருந்தந்தக்கரணவாதைப் ........✻
பித்தேருமுச்சர்கட்காம்பேதையான..............✻
ஊரணியாமலம்நிறைந்துவுடலைமெய்யென்.....✻
றுழலுவார்க்காகாவாமுறுதிதானே .... .........✻

~~~~~~~~

விருத்திநிருணயம்.

ஒருகடந்திருசியமாய்த்தோன்ற அக்கடத்தில் விருத்திகளைச்சோதிக்கும் விபரம், கடம் வெகு பூமியின்மோணுக்களானதா லெவ்விதமோணுக்களே ஒன்றுகூடி கடமாய்த்தோன்றவேண்டுமானால் அவ்விதமோணுக்கள் ஜலசம்பந்தத்துடன் கூடவேண்டும். ஜலசம்பந்தத்தாலும் நெகிழ்தல் மோணுவைச்சார அவ்விதமோணுவும் நெகிழ்தலுடையதாகும். இறுகாமல்க்கடமாகத்தக்கதல்ல - இறுகுதல் அக்கினியன்றியிற்கூடாது அக்கினி அசைவன்றியில் ஜலத்தைவற்றச்செய்யாது அவ்வித அசைவு இடமன்றிப்பவியாது இவ்விதமாகிற் கடத்தை பிருதிவியின்மோணுவாய்ப்பார்த்தவுடன் அதற்குச்சேர்க்கையாய் விளங்கியபசை ரூபமானஜலமோணுக்க



ளை அநுபவபெலத்தாலறிந்து அதில்நெகிழ்தலை யிறுகுவிக்கும்வல்லமையானசோஷணசக்தியுடைய தகனரூப அக்கினியின்மோணுக்களை அனுபவித்து அவ்வக்கினிமோணுக்களின் தகனவியாபாரரூபசலனத்தை வாயுமோணுக்களாகவறிந்து அவ்விதமோணுக்களின் சலனாதாரமாய் ஆகாயத்தையுமனுபவயுக்திவல்லமைகளால் விஷயீகரிக்க பஞ்சபூதங்களின் ஸமுதாயமானகடம் கடாகாரமாயும் அவ்வாகாரத்திலுள்ளடங்கிய ஆகாரமும் நான்குடஞ்சபூதங்களின்மோணுக்களும் அந்தந்தக்குணங்களோடும் வேறுவேறாகத்தோன்றும், அப்படித்தோன்றிய பூதங்களை அனுபவபெலத்தால் நிருணயித்து அவைகளில்வகைக்கைந்தவிதம் உள்ள பூதப்பிரிவு இருபத்தைந்தையுமறிய அப்பூதங்களாகவேவிளங்கும் இதற்குவரலாறு, திருசியமாய் ஆகாயந்தோன்ற அத்திருசியாகாயந்திருக்காய்நிற்க அப்பார்வையில்விளங்கிய ஆகாயம்பார்வையோடுங்கூட எண்ணத்திலடங்க அவ்வெண்ணம் லயித்துநிற்க அவ்வாகாயவெண்ணத்தின் சூனியமாத்திரமாய்நிற்க சூனியமான ஆகாயம் சூனியத்தன்மையோடும் நிற்விஷயத்தன்மையை அடைய ஸமமாய்விடும். ஸமஞ்சடத்தன்மையுடையதால்ச் சித்திலடங்கிச் சித்தாய்விளங்கும். விவர்த்திக்குங்காலத்திலு மப்படியேகிரமமாய் உற்பவிக்குமானதாலப்படியே மற்றநான்குபூதங்களுமொடுங்கி உற்பவிக்கும் அக்காரணசுபாவத்தை அக்காரியங்களிலிருப்பதால் உள்
~~~~~~~~

ளபடி அறியவேண்டும் இப்படி அறிய பிருதிவிசி
த்தாப்ப்பார்வையில்விளக்க அதின்சேர்க்கையின்
பொருட்டு நெகிழ்தலானஜலம் பிரயோசனமில்
லாமல் நிராதாரமாய்ப்பவித்து சின்மாத்திரமாய்
சேஷிக்கும். அப்படியே மற்றமூன்றுந் தன்தன்
குணங்களோடுங்காரணமான சித்பூதங்களாய்ச்சே
ஷிக்க க்கடமுஞ் சித்தாகவேவிளங்கிடும், அந்த சி
தாகாசகடத்தில்த்தக்தபட நியாயமாய்ப்பூதாம்சம்
(௨௫) வகையாயும் சப்தாதிமாத்திரை (௭௫) பேத
மாயுமதிசூக்ஷமமாய் விருத்தியில் விளங்கும். அப்
படியேஒருவிஷபவிருத்தியில் (௩) விருத்தியடங்கி
நிற்பதுபோற் பிரணவப்பிரகரணத்திற்சொல்லிய
(௯) விருத்தியிலுமதிசூக்குமமாய் (௱-௱) விருத்
தியிருக்கின்றது. அதெப்படியெனின்? விருத்தி
யென்றுலந்தக்கரணத்தின் றெளிவானதால்அந்தக்
கரணம் பஞ்சபூதங்களின்றெளிவாகையாலுலாக்க
ப்பட்டுது. முன்சொல்லிய (௯) விருத்திகளும்
ஆவரண-அத்தியாச-ஆரோப-அபவாத மென்னு
ம் நான்குவிருத்திகளையுமுள்ளுடையதுகள். ஆக
(௱-க்ஞ) (௱-௰௬) விருத்திகளாயிற்று. இவைகள்
ஸாத்தியங்கள் இவைகளினந்தந்தவனுபூதிக்கித்தகு
ந்தபடி சாதனமான நான்கும் மூன்றுசாதனம்
(௱) ஆகவும் ஒருசாதனம் (௲) ஆகவும்பவித்து
ஆ (௯௱) ஆயிற்று. சிரவணமே-மனனம்-மனன
மே-நிதித்தியாசமானதா லந்தந்த விருத்தியநுபூதி
க்கித்தகுந்தபடி அச்சிரவணரூபமான நிதித்தியாச



மும் (௩) விருத்தியாயிற்று. ஆக சாதனவிருத்
தி (௬) ஸாத்தியவிருத்தி (௰௬)மாம். இதைப்பெ
ருக்க கோடிவிருத்தியாயிற்று. அக்கோடிவிருத்
தியிலும் சிருஷ்டி-ஸ்திதி-சம்காரதிரோதான - அ
னுக்கிரக சக்திகளைந்தையும் சிவசக்தி அபின்னமா
யுள்ள விமர்சினீரூபமான வியாபினீ சக்திஸ்புர
ணத்தையும் அதததுகளுக்குத் தகுந்த வியாபகமு
டையதாகையா லந்த ஆறையுமீவுகுடுக்க (௬)கோ
டி விருத்திகளாயிற்று. இவளவுவிருத்திகளும் வி
காரமானதால் நிற்விகாரியினிடத்திலுண்டாக யிட
மில்லையாதலால், ஒரு விருத்திகளினுதவியின்றி
ஸ்வயம் நிருவிகாரியாய் விளங்குகின்றுனே ஆ
த்மா - அப்படியே விளங்கிட ஸஹஜஸ்திதி அநு
பவத்திக்குவரும். இவ்வறுகோடிவிருத்திகளேயே.
திருவாசகத்தி லாறுகோடி மாயாசக்திகளெனக் கூ
றியது. இவ்விருத்திசோதனைப்பிரகாரமநுபூதி ஸ
ஹஜஸ்திதியை அருள்செய்யும். இதின்பொருள்
ஸஹஜஸமாதி அப்பியாசரூபம் - ஸஹஜாவஸ்தை
ஸாத்தியரூபம். ஸஹஜஸ்திதிசாத்தியசாதனவிநிற்
முக்தம் அப்படியேவாராகவுபநிடதத்திலிந்தஸ்திதி
யை ருப்புமகாரிஷிகவும் - அரிதரிதெனத்துதித்
தார், இன்னிலைமையுடையவன்பிரமமுமல்லசீவனு
மல்ல-ஐக்கியரூபனுமல்ல, அவனெப்படியோ அப்
படியெனவுங்கூடச்சொல்லத்தகாதெனவும், உணா
க்கத்தக்கதல்ல.

தானேசகல ஜகமானுற்றன்னவஸ்தைகளைத்தான
றிவதுபோல்? சகலஜகங்களினவஸ்தைகளையுந்தான
றியவேண்டுமே, அப்படிக்காணாததனாலஃதெப்ப
டிக்கூடுமெனின்? உத்தரம். தன்சொற்பனத்திற்
றோன்றிய பருவதத்திற்பிரவேசிக்கத்தெரியாதிரு
ந்தாலு மதினின்றுவருகிற சித்தர்முகமாயந்தப்ப
ருவதத்தினிரகசியங்களை யறிவதாலும் விழித்தபி
ன் சொற்பனம்பொய்யாகி யதிற்கண்ட பருவதா
திகளியாவுந்தன்னைத்தவிரவில்லாததுபோற்கூடும்.

——(*)——

விருத்திநிருணயம் முற்றிற்று.



உ

ஸ்ரீசிவாயநம:

பரமசுந்தரேசகுருவேநம:-

# சுவாநுபூதிரஸாயனம்.

## முதலாவது—உற்பத்திப்பிரகரணம்.

ஏகமாயெக்காலத்திலும் அழிவில்லாததாயுள்ள
து பிரமமே ஒன்று அதினிடத்திலசைவற்ற ஆகா
யத்தினிடத்திற்றோன்றிய வாயுவைப்போல சுத்த
மாஞ்சத்துவகுணமென்னு மாயைதோன்றியம்
மாயையிற்-சத்வ-ரஜோ-தமோகுணமென்னுமுக்
குணத்தின் சமுதாயம்பொருந்திய ஜடசக்தியான
பிரகிருதிஜனித்தது.........................*

அப்பிரகிருதியே செய்கையின்பேதத்தால் ஆ
வரணசக்தியென்றும் விக்ஷேபசக்தியென்று மிர
ண்டுபிரிவுடன்கூடி சத்வகுணத்தைவிழுங்கித் தா
ன்மேலிட்ட தமோகுணத்தின் உண்மையான ஆ
வரணசக்தியால் பிராந்தியாற்றோன்றிய சோரப்
புத்தியாந் - தாணுவின்மறைவுபோல ஆத்மாவினி
டத்தின்மறைதலுண்டாய் சமஷ்டி பிரமாண்டமாய்
த்தோன்றக்கொஞ்சஞ்- சத்திவத்தின்சேர்க்கையுடை
ய ரஜோகுணமேலான ஸ்வரூபமுடைய விக்ஷே
பசக்தியானது லிங்கசரீரமுதலான வியஷ்டிகளின்
பேதத்தைத்தோன்றுவித்து பிரமாண்டத்தையல
ங்கரிப்பித்துநிற்க அதையவித்தையென்றும் விவ

கரிப்பார்கள் அதுவே சகலஜகத்திக்குஞ்-ஜனன முதலான துன்பத்தைக்கொடுக்கு மோகத்துக்கு முதலாம்......................................*

இவ்விதமான சக்திகளாற்றேன்றகிற சமஷ்டி யான ஜகத்தை மூவிதபேதத்தாலபிமானித்த - சைதன்னியம்-விராட்டு--இரணியகற்பம்-அந்தரியாமி யெனவும் பேதமுடையனவாம்....................*

அதில் விராட்டைக்கூறுமிடத்தில் சமஷ்டியில் ஸ்தூலசரீரத்தையபிமானித்த சைதன்னியம் விராட்டாம். சூக்ஷ்மசரீரத்தையபிமானித்த சைதன்னியம் இரணியகற்பனும், காரணசரீரத்தையபிமானித்த சைதன்னியம் அந்தரியாமியாம்...........*

வியஷ்டியில் ஸ்தூலசரீரத்தையபிமானித்த சைதன்னியம் விஸ்வனுவான், சூக்ஷமத்தையபிமானித்தசைதன்னியந்தைஜஸனுவான்,காரணத்தையபிமானித்த சைதன்னியம் பிராஞ்ஞனுவான்..........*

வியஷ்டி உடல்மூன்றுக்கும் அப்புறப்பட்டதாய் சகலதிருஷ்டாவாய் விளக்குகின்ற சைதன்னியமே சாக்ஷியாகும்..............................*

சமஷ்டி உடல்மூன்றுக்குமப்புறப்பட்டதாய் சருவசம்பூரணமாய்விளங்குகின்றசைதன்னியமேசருவசாக்ஷியான ஈஸ்வரனுவன் ...................*

இவ்விதமாக முன்சொல்லிய சமஷ்டி வியஷ்டியான உலகத்திக்கும் பஞ்சபூதமேசாதனமாம் ஆவரணம் விக்ஷேபமென்றசக்தியவித்தையாம் - திரிகுணத்தின் சமூதாயமே மூலப்பிரகிருதியாம்...*



இம்மூலப்பிரகிருதியுடன்கூடிய சைதன்னியமான ஆத்மாவினிடத்தினின்றும் அவகாசரூபமான ஆகாயமுண்டாயிற்று அதினின்றும் வாயுதோன்றிற்று அதினின்றும் அக்கினிதோன்றிற்று அதினின்றும் அப்புதோன்றிற்று அதினின்றும் பிருதிவி தோன்றிற்று...........................................*

இதின்குணங்கள் சப்த-ஸ்பரிச-ரூப-ரச-கந்தமென்கிற அஞ்சு,பிருதிவிக்குயிந்தக்குணங்கள் முழுவதுமுண்டு அப்புவுக்கு கந்தந்தள்ளிமற்றநான்கு அக்கினிக்கு கந்தரசந்தள்ளி மற்றமூன்று வாயுவுக்கு சப்த-ஸ்பரிசமென்கிற இரண்டு ஆகாயத்துக்கு சப்தமே ஒன்று.................................*

இனி பஞ்சபூதத்தின்குறிப்பு கடினமுடையது பிருதிவிநெகிழ்ச்சியுடையது அப்பு உஷ்ணமுடையது அக்கினி சலனமுடையது வாயு வெளியுடையது ஆகாயம் எலும்பு தோல் ஸ்நாயு உரோமம் மாமிசம் இந்த ஐந்தும் பிருதிவியின் விகாரமாம் இரத்தம் மூத்திரஞ்சிலேஷ்ட்மஞ் சுக்கிலம் மேதசு இந்த ஐந்தும் அப்புவின்விகாரமாம் பசி-தாகம்-நித்திரா-ஆலசியம்-இரதி- இந்த ஐந்தும் அக்கினியின்விகாரமாம் நடத்தல்- தாண்டுதல்-ஏறுதல்- இறங்குதல்-தகைவுதல்- இந்த ஐந்தும் வாயுவின்விகாரமாம்-காமக்-குரோதம்-உலோபம்-மோஹம்-மதம் மர்ச்சரம்- இந்த ஆறும் உள்ளத்தின்சத்துருவாகும் ஜனிக்குதல்-இருக்குதல்-வர்த்திக்குதல்- பரிணமம் க்ஷயம்-நசிக்குதல்-இந்த ஆறும் தேகபாவங்களாம்

அசனம்- பிபாசை - சோகம் - மோகம் - ஜரா-மிருதி - இவைகள் ஷடூருமிகளாம்- தோல்-எலும்பு மாமிசம்-இரத்தம்-மேதசு-மச்சை-சுக்கிலம்- இந்தத்தாதுக்களிடத்தினின்று தேகரூபமான பிரபஞ்சஞ்ஜனித்தது.................................*

இவ்வளவும்மாயையின்விவகாரமானதால்அறிவற்றஜடமாம் யிந்தஜடமானஜகத்தில் சிவமாஞ்சைதன்னியமானது பிரவேசித்து அதின்சன்னிதானவிசேஷத்தா லிந்தஜகத்துஞ் சைதன்னியம்போலவே விளங்குகின்றது..............................*

தேவர்-மனிதர்-பசு-பக்ஷிமுதலான ஜடமானஜகத்தினுள்ளே பிரவேசித்துநின்ற ஈசனைத்தெரிவிக்குதலெப்படியெனின் உடல்முதலானசகலங்களையும் என்னுடல்-என்கண்-என்மனம்-என்புத்தி-என்சுகம்-என்துக்கம்-என்னகங்காரம்- என்பெண்டு-என்பிள்ளை-என்பொருள்- என்பூமி-என்சாக்கிரத்து என்சொப்பனம்-என்தூக்கம்- என்சமாதி- என்சாதி-என்வர்ன்னம்-என்ஆச்சிரமம்- என்தர்மம்-என்பாவம்-என்று ஜடமானகடத்தை புருடன்போல விளங்கிவிக்கிற சகலஜகத்தைப்பகுத்தறிந்த அறிவானசைதன்னியமே பிரமமாம் இதை திருக்கென்றுகூறுவார்கள் மற்றசகலங்களையுந் திருசியமென்றுங்கூறுவார்கள்..............................*

இந்த திரிசியமானதேகத்தை நாமென்றும் நமதென்றும் அபிமானிக்க சீவத்துவம்நேரிடும் அக்



காலத்தில் அவன் உபாதியையுஞ் சுபாவத்தையுந் தெரிய விபரமெப்படியெனின்..................*

மூலப்பிரகிருதியின் உண்மை திரிகுணத்தின் சமுதாயமானதால் அவ்விதவுபாதியையுடைய சைதன்னியத்தில் ஆகாயாதிகள் ஜனித்ததால் குணத்திரயத்தின்சுபாவம் அதையுடையதாகும்........*

அவ்விதபஞ்சபூதத்தின் ஸாத்விகாம்சத்தினின்றும் அந்தக்கரணஞ்ஜனித்தது அவ்வந்தக்கரணமே விருத்திபேதத்தால் மனம்-புத்தி-சித்தம்-அகங்காரமென்று நான்குபேதத்தையடைந்தது இதையந்தரிந்திரியமென்று கூறப்படும்...................*

பாகியேந்திரியங்களின் விபரமெப்படியெனில் ஞானேந்திரியமென்றும்-கன்மேந்திரியமென்றும் வகை-ஒன்றுக்கு அஞ்சுவீதம் பத்தாகும் இவைகளில் ஞானேந்திரியமாவது- சுரோத்திரம்- த்வக்கு-நேத்திரம் ரசனை கிராணம் ஆக ஐந்து,கன்மேந்திரியமாவது-வாக்கு-பாதம்-பாணி-பாயுரு- உபஸ்தம்-ஆக ஐந்து, இதுகளின் விஷயங்களாவன சப்தஸ்பரிச-ரூப-ரச-கந்தமென்கிற அஞ்சும்,ஞானேந்திரியத்தின்விஷயங்களாம், வசன- கமன-ஆதான-விசர்க்க-ஆனந்தமென்கிற அஞ்சும்- கன்மேந்திரியத்தின்விஷயங்களாம்.........................*

இந்திரியங்களினுற்பத்தியாவன ஆகாயத்தின்சத்துவாம்சத்தினின்றுஞ் சுரோத்திரஞ் ஜனித்தது வாயுவின்சத்துவாம்சத்தினின்றுந் த்வக்கு ஜனித்தது அக்கினியின்சத்திவாம்சத்தினின்றும் நேத்

திரஞ்ஜனித்தது அப்புவின் சத்துவாம்சத்தினின்றும் ரசனைஜனித்தது பிருதிவியின் சத்துவாம்சத்தினின்றுங்கிராணஞ்ஜனித்தது சமஷ்டி பஞ்சபூதத்தின் ரஜோம்சத்தினின்றும் பிராணனுண்டாயிற்று ஆகாயத்தின் ரஜோம்சத்திலிருந்து வாக்குண்டாயிற்று வாயுவின்ரஜோம்சத்திலிருந்து பாணியுண்டாயிற்று அக்கியின்ரஜோம்சத்திலிருந்து பாதமுண்டாயிற்று அப்புவின் ரஜோம்சத்திலிருந்து பாயுருவுண்டாயிற்று பிருதிவியின்ரஜோம்சத்திலிருந்து உபஸ்தமுண்டாயிற்று......*

பூதங்களின் வாயுவானபிராணன்மாத்திரம் விருத்திபேதத்தால் பிராணனென்றும் அபானனென்றும் வியானனென்றும்-உதானனென்றுஞ்-சமானனென்றும் - ஐந்துபேதமாயிற்று......*

ஸ்தூலசூக்ஷமகாரணசரீரத்திரயத்தின் வரலாறு பூதம் (௫) ஞானேந்திரியம்(௫)கன்மேந்திரியம்(௫) வாயு (௫) கரணம்(௪) ஆக.தத்துவம்(௨௰௪-ம்)கூடினது ஸ்தூலசரீரமாம். வாயு(௫)ஞானேந்திரியம்(௫) கன்மேந்திரியம்(௫)மனம்(௧)புத்தி(௧)ஆக(௰௭)தத்துவமுடையதாயும் அபஞ்சீகிருதபூதத்தினின்றுவுண்டானது சூக்ஷமசரீரமாம் அதுவே சொர்க்காதி போகங்களுக்கு சாதனமாம்......*

தூக்கத்திலொன்றுந்தெரியாமற் றூங்கினேனென்றசொல்லாலனுபவிக்கப்பட்டவொன்றையுமறியாமையான அஞ்ஞானவனுபவமே காரணசரீரமாம்......*



இதுகளின் அவஸ்தையாவன சாக்கிரஞ்- சொப்பனஞ்- சுழுத்தியெனமூன்றும். அவற்றுள்......*

சாக்கிரமாவது யாதெனின் பாகியேந்திரியங்களோடுகூடின ஸ்தூலசரீரவிஷயமான ஜகத்தின்வியாபாரமாம்......*

சொப்பனமாவது மனதின் வாசனாரூபமானஜகத்தின் பிரவிருத்தியாம்......*

சுழுத்தியாவது புத்திமுதலான சகலகரணங்களும் லயித்து தன்னறிவைமயக்காநின்ற தூக்கமான அஞ்ஞான அனுபவமாம்......*

இந்தமூன்றுசரீரத்தையுஞ்சாக்ஷியான ஆத்மாவுக்குக்கிரீடையடையும்பொருட்டானதால் மூன்றுபுரமாகக்கூறப்படும்......*

கத்தியைமறையாநின்ற உறைபோலாத்மாவைமறையாநின்ற மூன்றுடலினுள்ளடங்கிய பஞ்சகோசத்தின்விபரமாவன......*

அன்னமயம்-பிராணமயம்- மனோமயம்- விஞ்ஞானமயம்-ஆனந்தமயமெனவைந்தாம்......*

அவற்றுள் அன்னமயகோசமாவது ஸ்தூலசரீரமாம் அதெப்படியெனின் அன்னாதிபோசனத்தால் விருத்திக்ஷயங்காணப்படுவதாலும் உற்பத்திக்குமுன்னும் லயத்துக்குப்பின்னுஞ்ஸ்வரூபமில்லாததனாலும் என்சரீரமென்றுகடம்போல ஜடமாய்வேறுபட்டு அனுபவிக்கப்படுதலாலும் இந்தஅன்னமயகோசம் ஆத்மாவாகத்தக்கதல்ல......*

பிராணமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மாவல்ல எப்படியெனின் பிராணனானது தன்னாலடக்கத்தக்கதாயும் விடத்தக்கதாயுஞ் சுழுத்தியில் பிராணனிருந்தும் விஷயங்களையறிய அறிவில்லாததனாலும் என்பிராணனென்றும் வேறுபடுத்தி அனுபவிக்கப்படுவதனாலும் பிராணவாயு வெளிக்கண்டகாற்றுப்போல ஜடமானதாலும் பிராணமயகோசமும் ஆத்மாவாகத்தக்கதல்ல................*

மனோமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மாவல்ல எப்படியெனின் சங்கற்பவிகற்பத்தாற் றோன்றியதாயுஞ் சமுசயமுடையதாயும் நிச்சயத்தால் நாசமுடையதாயுங் காமக்குரோதாதிகளாற்றுன்பமுடையதாயும் என்மனஞ்சமாதானப்படாததால்க் காதுகேள்க்கவில்லையென்று தனக்குவேறுபட்டுவனுபவிக்கப்படுவதால் ஜடமானமனோமயகோசமும் ஆத்மாவாகத்தக்கதல்ல........................*

விஞ்ஞானமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மாவல்ல எப்படியெனின் சித்தின்சாயையாகியுஞ் சுழுத்தியிற்காணாததால் லயித்ததாயும் விபகாரசமயத்திற் சரீரவிந்திரியங்களை வியாபித்ததாயும்என்புத்திகெட்டுப்போயிற்றென்றுசொல்லும்போது நாசமுடையதாயும் என்புத்தியென்று தனக்கன்னியமாயனுபவிக்கப்படுவதாலும் நிச்சயரூபமானபுத்தியுஞ்ஜடமானதால் விஞ்ஞானமயகோசமும் ஆத்மாவாகத்தக்கதல்ல..............................*

ஆனந்தமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மா



வல்ல வெப்படியெனிற்றூக்கத்திலனுபவிக்கப்பட்ட வாபாசமானசுகலேசத்தை யபிமானித்து ஸ்வப்பிரகாசமான தன்னையறியாம லொன்றுந்தெரியாமையான அவித்தையா மஞ்ஞானத்தின்முழுகியந்தசுழுத்தியாகின்ற வஞ்ஞானவிருத்தியிற் றோன்றிய சுகத்தைத்தூக்கந்தெளிந்தபின் சுகமாய்த்தூங்கினேனென்றும் விஷயவிருத்தியிற் பிரதிபலித்த துக்கத்தையபிமானித்து நான்றுக்கியென்றுமனுபவிக்கப்படுவதாலுந்திரிய சமாதியினாசமுடையதாயும் நானென்றவகங்காரதத்துவமான இந்தவானந்தமயகோசமுங் கடம்போல் ஜடமாய்த்தனக்கன்னியமாயனுபவிக்கப்படுவதா லாத்மாவாகத்தக்கதல்ல.........................................*

இந்தகோசங்களைந்துஞ் சரீரத்திரயங்களி லடங்கும்விதமெப்படியெனின்-ஸ்தூலசரீரத்திலன்னமயகோசமுஞ்-சூக்ஷமசரீரத்திற்பிராணமயகோசமுமனோமயகோசமும்-விஞ்ஞானமயகோசமுங் - காரணசரீரத்தி லானந்தமயகோசமுமாகவடங்கும்.*

ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத்தெரியவிபரமெப்படியெனின். ஜாக்கிரம் - சொப்பனம்- சுழுத்தி- இந்தமூன்றவஸ்தைக்குமபிமானிகளான-விசுவன்- தைஜஸன்- பிராஞ்ஞனென்று விவகரிக்கப்பட்ட- ஜீவர்கண் மூன்றுபேர்களா, அல்லதொருவனே மூன்றுபேதமாய்த்தோன்றுகிறானா, மூன்றுபேருமொருவனென்றால் ஓரவஸ்தையினனுபோககாலத்தின் மற்றோரவஸ்தையினனுபோகமனுபவிக்க

ப்படாததா லந்தந்தவஸ்தையி லனுபவியாகின்ற
சீவன்வேறெனக்கூறலாமே, உத்தரம்-மூன்றவஸ்
தைக்கும் நானேற்றுத்தூங்கினேன் இவ்விதமான
சொப்பனங்கண்டே னிவ்விதமாய் விழித்திருந்து
விவகரித்தேனென்று ஏககாலத்திலொருவனே வி
வகரிப்பதால் வாதிக்கப்படாத வனுபோகமானதா
லு மிந்தமூன்றவஸ்தைகளையுமறிந்த சைதன்னிய-
மே-பேதத்தொழில்செய்யுமொரு அரசன் மூன்
றுகட்டுடைய வோரரண்மனையி லொவ்வொருகட்
டி லொவ்வொருவிதமானதொழிற்செய்யுங்காலத்
தி லந்தந்தத்தொழிலால்வரும்பேரினாலவ்வரசனெ
வ்விதபேதமாய் விவகரிக்கப்படுகிறானோ அவ்வித
மாய் மூன்றுபேதமாயனுபவிக்கப்படுகிறான்...※

இதுபோல் சமஷ்டிசாக்ஷியாகின்ற சைதன்னிய
மே சமஷ்டி யவஸ்தாபேதத்தால்-விராட்டு-இரணி
யகற்பன்-அந்தரியாமியென்றுவிவகரிக்கப்படும்※

சுத்தசத்வமான மாயோபாதியுடையதாயுஞ்சரு
வஞ்ஞமாயுஞ்சருவசம்பூர்ணமாயுஞ்சருவஜகத்து
க்குங்காரணமாயுஞ்சருவசாக்ஷியாயும் விளங்குகின்
ற சைதன்னியமே ஈஸ்வரனாவான்...............※

அவித்தையையுபாதியாகவுடையதாயுங் கிஞ்சிஞ்ஞ
னாயும்- அசம்பூர்ணனாயும்- அகமகமென்றெல்லா
ராலும் அனுபவிக்கப்பட்ட சைதன்னியமே சீவ
னாவான்........................................................※

இவ்விதமான சீவேஸ்வரர்களையுள்ளபடி தெரிவி
க்கவந்த சுருதிகளின்பயன்-கருமகாண்டம்- உபாச



னாகாண்டம்-ஞானகாண்டமென்றுமூன்றுபேதமா
குஞ் சீவன் றேகாபிமானத்தோடுங்கூடின காலத்
திற்றேகத்தைப்பற்றின வருணாச்சிரமதருமங்களை
ப்போதிப்பிக்கும் பின்பு வருணாச்சிரமகன்மானு
ஷ்டானத்தாலந்தரமுகப்பட்டகாலத்திற் சீவனுக்கி
ருதயகமலத்தி லீஸ்வரனுடைய சகுணோபாசனை
யைவிதிக்கும். உலகவாடிக்கை முதற்பிரமலோகவ
ரையிலும் நிராசையாய் மும்மூட்சுவானகாலத்திற்
சீவனுக்கு ஞானகாண்டத்தைவிதிக்கும்........※

இந்தமும்மூட்சுவுக்கு ஞானகாண்டத்தின்விபர
ந்தெரியக்கூறுதல்-சீவனெப்போதருசியுடன் ஜகத்
துக்கணவைத்தள்ளி முக்திவழிதேடுகிறானோ அப்
போதவனுய்யும்பொருட்டுபிரமோபதேசத்தைச்
சொல்லுகிறதுடனாசரியரகமுகமாயுபதேசிக்குங்கு
ருசிஷ்யர்களினடத்தையையுந் தெரியக்கூறுகின்றது

குருவானவரடாம்பிகனாயுஞ்- சாந்தனாயும்- நிரா
சையுடையவனாயும்-வேதசாஸ்த்ரார்த்தங்க டெரிந்
தனுபவிஞ்ஞனாயும்- வேதாந்தசம்பிரதாயந்தெரிந்
தவனாயுஞ்-சிஷனுடைய சித்தபரிபாகங்கண்டுபதே
சிக்கத்தெரிந்தவனாயுங் கபடமற்றுச்சொல்லுகின்ற
வனாயுமிருக்கவேண்டும்...........................※

சிஷன்பிரமமேசத்தியம் மற்றசீவேஸ்வரஜகத்த
சத்தியமென்று நித்தியாநித்தியவிவேகந்தோன்றி
முக்தியடையவேண்டுமென்ற விச்சையினாற்றேக
போகமுதற் பிரமலோகபோகம்வரையிலுமலத்தி
லருசிதோன்றினாற்போலருசிதோன்றியதுகளின்

தியாகபுத்தியாகியவைராக்கியஞ்சமந்தமம் உபாதி
திதீக்ஷை- சிரத்தை-சமாதானமும்-மும்மூட்சுத்து
வமாகிய இந்தநான்குசாதனங்களுடையவனாகவிரு
க்கவேண்டுஞ் சீஷன்பின்பாசிரியர்பாதகமலத்தை
ச்சேர்ந்து அஷ்டாங்கத்துடனே நமஸ்காரஞ்செய்
து கைகூப்பித்தலைவணங்கி வணக்கத்துடனேவில
கிநின்று அதிபூதம்-அத்யாத்மகம்- அதிதைவம்-இ
வ்விதமானதாபத்திரயாக்கினியினால் நிதராந்தக்
த்தனானேன் என்றாதனாகியவாசரியரோ கிருபை
பொருந்திய வுமதுதிருக்கண்பார்வையாமரிவியா
ல் ரக்ஷிக்கவேண்டுமென்றுகேட்க.................*
அப்போதாசரியர் மாணாக்கனைநோக்கி குளந்
தாய்பயப்படவேண்டாம் எக்காலமும் பயமில்லாத
தாயுமெப்போதுமானந்தக்கடலாயும் அகண்டசச்
சிதானந்தமாயும் ஸ்வயஞ்சோதியாயும்விளங்குகின்
றபிரமமே நீயென்றுபதேசிக்க...................*
மாணாக்கன்-ஜனனமரணம்பொருந்திய நானெ
ப்படி பிரமமாவேனென - உபநிடதமுதலானதுக
ளினாலும் பெரியோர்களனுபவித்த வனுபோகங்
களினாலுந் தகுந்தயுக்திகளினாலுஞ்சொல்லுகிறதெ
ன்னவெனின்- ஸச்சிதானந்த பிரமசைதன்னியந்த
விர மற்றஜகமெல்லாம் ஜடமானதாலும் அந்தசை
தன்னியமேஜகத்தைசிருஷ்டித்து அதிற்பிரவேசித்
துவருவதினாலுஞ்சிவரூபமானசாக்ஷியாய்விளங்கு
தலாலும் உன்னுடைய மூன்றவஸ்தைகளையுமறிந்
தசாக்ஷியானவுனக்குஞ்சிருஷ்டிக்கப்பட்டும்பரிபா



லிக்கப்பட்டுமழிக்கப்பட்டுந் தன்னிடத்திற்கற்பிக்
கப்பட்டஜகத்துக்குஞ்சாக்ஷியான பிரமசைதன்னி
யத்துக்குஞ் சைதன்னியரூபமாயாவது சாக்ஷிரூப
மாயாவதுபேதங்கூடாததாலுஞ் சமாதியிற்றுரியத்
தில்ஜகமனுபவிக்கப்படாததாலுஞ்சமஷ்டிவியஷ்டி
யவஸ்தைகளைத்தள்ளி சாக்ஷிமாத்திரமாய்நின்றாயா
கில்கானலிற்றோன்றியஜலம்போலுற்பத்திக்குமுந்
தியகாலத்திலும்விவகாரகாலத்திலும் நாசத்திக்கப்
பறப்பட்டகாலத்திலுமுன்னிடத்தில் ஜகம்பொய்
யென்றனுபவிக்கபடுதலால்நீயேபிரமமென்றேன்
ஆனதால் நீ இவ்விதமாய் சமாதிசெய்வாயென்
றனுக்கிரிகிக்க உடனேசீஷன் சமாதியிலிருந்து பி
ரமானந்தானுபூதியையடைந்து அங்கே ஈசன் கு
ரு தான் மற்றஜகமென்கிறபேதமற ஆனந்தமாத்
திரமாய்நின் திருகண்ணாலும் ஆனந்தபாஷ்பம்
பெருகி யுடலும்புளகிதமாகி சமாதியினின்றும்வி
ழித்து ஆசரியர்பாதத்தி னமஸ்காரஞ்செய்து எக்
காலத்திலும் விளங்குகின்ற ஏகமாம் பிரமஸ்வரூப
த்தைத்தவிர மற்ற சகலஜடமானஜகங்களும் பொ
ய்யெனத்தம்பட்டமடித்தானந்தக்கடலாடிநின்ற சீ
ஷனையாசரியருச்சிமோர்ந்தாலிங்கனஞ்செய்து அ
கண்ட ஸச்சிதானந்தபிரமமாகியவுனக்கு பந்தமுக்
தியற்ற நகரத்தில் ஜயஜயவென்றாசீர்வாதஞ்செய்
து ஆத்மானந்தராச்சியத்தின் முடிசூட்டி இருவ
ருமொருவராகத்திவ்வியமங்களரானார்கள்......*

உற்பத்திப்பிரகரணமுற்றிற்று.

# சுவாநுபூதிரஸாயனம்.

## உ-வது சப்தபூமிப்பிரகரணம்.

ஐயா ஆசிரியரே கேவலம்ஸன்மாத்திரமாய் சேஷித்தபோதரூபமான பரமாத்மாவொருவனே நிச்சயமென்றுபதேசித்தபிரகாரஞ் சமாதியனுபவத்தாலுஞ் சுருதியுக்திகளாலுஞ் சரியென்றறிந்தேன் ஆனாலிந்தப்போதமே விவகாரகாலத்திலனேகபேதமாய்த்தோன்றுவதால்-முன்னேகமாய்த்தோன்றியபோதம்விவகாரத்திலனேகபேதமாய்த்தோன்றுவதற்கு சுபாவமாய்க்கூடாததனா லஃதெவ்விதோபாதியாற் கூடுமென்பதையும் அந்தவுபாதிகளாலெத்தனைவிதமாய்த்தோன்றுகின்றதென்பதையுந்தெரியவுபதேசித்தருளவேண்டுமென்றுமாணாக்கன்கூற.............................*

ஆசிரியர்,'பரமாத்மாவாகியபோதம்உபாதிபேதத்தாலெண்ண மற்ற அனேகபேதமாய்விளங்கினபோதிலுமஹான்களா லதையேழுவகுப்பாய்ப்பகுத்து சப்தபூமியென்று விவகரிக்கப்படும்.....*

அஃதெப்படியெனின்-நிராவரணசைதன்னியம் ஸாவரணசைதன்னியம்-ஸாக்ஷிசைதன்னியம்- அந்தக்கரணாவச்சின்னசைதன்னியம் - அந்தக்கரணவிருத்தியவச்சின்னசைதன்னியம்-இந்திரியாவச்சின்னசைதன்னியம்-விஷயாவச்சின்னசைதன்னியமென்றேழுபங்காய்க்கூறப்படும்.....................*



இவைகளினர்த்தமெப்படியெனின் சாவரணசைதன்னியமென்ற விவகாரத்தை யபேக்ஷித்துப்பிரமமானது நிராவரணசைதன்னியமென்று கூறப்படும்.....................................*

சர்வஞ்ஞுத்வாதிக்குறிப்புகளுக்கு முதலாயுள்ள சுத்தசத்வமாகின்ற மாயையையபிமானித்த சைதன்னியமாமீசனே சாவரணசைதன்னியமென்று கூறப்படும்.....................................*

அவஸ்தாத்திரயங்களைப்பகுத்தறிந்த சைதன்னியமே சோதிதத்வம்பதமான சாக்ஷிசைதன்னியமாம்.....................................*

மனம்-புத்தி-சித்தம்-அகங்காரம்- இவைகளின்சமுதாயமானதாயும் பஞ்சபூதங்களின் சமஷ்டிசத்வாம்சங்களிடத்தினின் றுற்பத்தியானதாயுமுள்ளவந்தக்கரணத்தை யபிமானித்த சைதன்னியமே யந்தக்கரணாவச்சின்ன சைதன்னியமாம்...........*

அவ்வந்தக்கரணத்தின் விகாரமான - காமம்-குரோதம்-உலோபம்-மோஹம்-மதம்- மச்சரம் - இவைமுதலான சகலவிஷயங்களாயுள்ள ஆந்தரவியாபாரமானவிருத்தியையபிமானித்தசைதன்னியமே அந்தக்கரணவிருத்தியவச்சின்னசைதன்னியமாம்.

சப்த-ஸ்பரிச-ரூப-ரச-கந்தமென்கின்ற இவைகளையறிகின்றசுரோத்திரம்-த்வக்கு-சக்ஷு-சிங்ஙவை கிராணமென்கின்றஞானேந்திரியமென்னவசன-கமன ஆதானவிசற்க-ஆனந்தமென்கின்றஇவைகளை விஷயிகரியாநின்ற-வாக்கு-பாதம்-பாணி- பாயு-உ

பஸ்தமென்கின்ற கன்மேந்திரியமென்ன இந்தவி
ருவகைப்பேதமுடைய இந்திரியங்களை யபிமானி
த்த சைதன்னியமே இந்திரியாவச்சின்ன சைதன்
னியமாம்..............................*

பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயமென்கின்ற
பஞ்சபூதங்களையும் இதுகளின்விகாரமானசடம் பட
ம்முதலான சகலபூதபௌதிகங்களையுமபிமானித்த
சைதன்னியமேவிஷயாவச்சின்னசைதன்னியமாம்

இவைகளினநுபவம் வருகிறதின்பொருட்டவ
ஸ்தைகளைக்கூறுதல்-ஜாக்கிரம் - சொப்பனம்-சுழு
த்தி- துரியம்- துரியாதீதம்- அதீதோதீதம்- சன்ம
யமென்றேழுவகையாய்க் கூறப்படும்..........*

இவைகளினநுபவவிபரமெப்படியெனின் ஜா
க்கிரத்தில் விஷயாவச்சின்ன சைதன்னியமும். இந்
திரியாவச்சின்ன சைதன்னியமுஞ் சொப்பனத்தி
லந்தக்கரண விருத்தியவச்சின்ன சைதன்னியமு
மாகவநுபவிக்கப்படும்.......................*

மனம்- புத்தி- சித்தம்- அகங்காரம்- இந்த நான்
குமந்தக் கரணத்தின் விகாரமானதாற் றனது வி
காரத்தாற் றனது ஸ்திதி யநுமானிக்கப்பட்டுத்
தனது காரணமான வஞ்ஞானத்தோடும் பேத
மறத்தனது விகாரங்களின் யாதொரு தோற்றுத
லுமற்றுத் தூக்கத்திலநுபவிக்கப்படுவதாற் சுழு
த்தியி லந்தக்கரணாவச்சின்ன சைதன்னியமநுப
விக்கப்படும்....................................*

இவைகளில் - ஜாக்கிரஞ் - சொப்பன மிரண்டும்



அஞ்ஞானிகளாகியசீவர்களால்நிர்ணயமாயநுபவி
க்கப்படுஞ் சுழுத்திதினந்தோறு மநுபவிக்கப்பட்
டபோதிலுமவர்களால் நிர்ணயம்பண்ணக்கூடாது.

மூன்றுமவஸ்தையான சுழுத்தியில்-எனக்கொ
ன்றுந்தெரியாமற்றூங்கினேனென்ற தான்வேறுப
ட நின்றநுபவித்த சைதன்னியத்தைஸாக்ஷியென்
றுகூறலாம்- ஆனதால் - தன்னை ஸாக்ஷியாயறிவித்த
ஸாக்ஷிபோதவிருத்தியே துரியாவஸ்தையாம்-அ
வ்வவஸ்தையி லவ்விதமானஸாக்ஷிவிருத்தியை யபி
மானித்தசைதன்னியமேஸாக்ஷி சைதன்னியமாய்த்
துரியாவஸ்தையிலநுபவிக்சப்படும்...........*

சமஷ்டிவியஷ்டியென்று விவகரிக்கப்படுகின்ற
ஜகஞ்சடமானதாலதற்குத்தானே சித்திகூடாது,நா
னாவிசித்திரத்தோடுங்கூடின சர்வஜகத்தையுஞ்சிரு
ஷ்டிக்கவேண்டுமானால் நானாவிசித்திரமுடைய ச
ருவஞ்ஞ சக்திபொருந்திய சைதன்னியத்தாற் கூ
டவேண்டும், ஆனதாற்சுத்தசத்வமாகின்ற மாயை
யன்னியிற் சுத்தசைதன்னியத்திக்கு சருவஞ்ஞ ச
க்தியைவிவகாரத்தில் நிரூபிக்கக்கூடாது,ஆனதாற்
பரதந்திரமானசுத்தசத்வமாயும் விசித்திரஸ்வபாவ
மாயுமிருக்கின்ற மாயையைசைதன்னியமபிமானி
க்க அச்சைதன்னியத்தை சாவரணசைதன்னிய
மென்று விவகரிக்சப்படும்.....................*

முற்கூறியஜகத்தை யதின்காரணமான மாயை
யிற் காரணத்தைத்தவிரக்காரியம் வேறில்லையென்
று பேதமறக்கண்டு-அம்மாயையை யபிமானித்த

சைதன்னியமுஞ் சைதன்னியரூபமான தன்னைத்
தவிரவேறில்லாததனாற் றன்னுளடங்கியவகண்டோ
பாதியானமாயையை யபிமானித்த சைதன்னியத்
தை நானென்றும் அகண்டோகமென்று மூபாதி
யே திரியாதீதாவஸ்தையாம். அதிற்சாவரணசை
தன்னியமநுபவிக்கப்படும்... ..................*

அவ்வகண்டோகமென்னுமகம் விருத்திக்கப்பு
றப்பட்டு, அவ்விருத்தியையறிந்த சைதன்னியமே
நிராவரணசைதன்னியமாம். அவ்விருத்தியினநு
பூதியே அதீதோதீதாவஸ்தையாம் அதில் நிராவர
ணசைதன்னியமநுபவிக்கப்படும்..................*

அகண்டோகமென்றவிருத்தி ஞாதிரு ஞானம்
ஞேயமுடையதாகவிளங்குவதால் அவ்விருத்தியபி
மானியை சூக்ஷமதிரிபுடியுடையதான மஹாசாத்
வீகாகங்காரியென்று விவகரிக்கப்படும் இதைத்த
ற்போதமெனவுங்கூறுவார்கள்......................*

இவ்விருத்தியுந்தனததிஷ்டான ஸ்வரூபமாய்த்
தெளிந்த அவானஸ்திதியே ஸத்தாம் - பூர்வாவஸ்
தையை யபேக்ஷித்து ஸன்மயாவஸ்தையென்று
கூறப்படும். இதில்மஹாமௌனமானதால் விவ
காரமேகிடையாது..............................*

இவ்விதமான பிரமாநுபூதிமானைப்பிரமமென்
றுகூறுவார்கள் இவர்கள்பொருட்டுவிதிநிஷேதரூப
மான சாஸ்திரங்கிடையாதென்றாசாரியர்கூற மாணா
க்கன்சகலசம்சயங்களுந்தீர்ந்து தானேதானானன்.

இரண்டாவதுபிரகரணம்முற்றிற்று.



உ

## சுவாநுபூதிரஸாயனம்.

### ௩—வது முக்தர்களின்லக்ஷணப்பிரகரணம்.

சாதனபேதத்தாலநுபூதியின்றாரதன்மியங்களி
னால்- வித்து-வரன்-வரியான்-வரிட்டனென்று நா
ன்குவகுப்பாய்க்கூறப்படும் - குருவின்பிரசாதத்
தால் ஸ்வாநுபூதியையடைந்திருந்தபோதிலுந் தி
டர்ச்சியுடனேசெய்கின்ற சாதனங்களின்பெலத்தா
ற் சமாதிகாலத்திற்சிலகாலம்-நிர்மலாநுபூதியுடை
யவர்களாகவு மற்றக்காலங்களில் ஜகத்தின்விருத்தி
யாற்பாதிக்கப்பட்டும் வித்யாவிருத்தியாற் சுகது
க்கங்களைத் தங்களுக்கில்லையென்று நீக்குதல்செய்
வார்கள்-இதை வித்தின்குணமென்று சொல்லப்ப
டும்............................................*

சொப்பனத்திற்கண்ட ஜகத்தை சாக்கிரத்திற்
பொய்யென்றநுபவிப்பதுபோல் விவகாரத்திற்
றோன்றிய ஜகத்தை சாதனபெலத்தாற் சமாதிகா
லத்திற் பொய்யென்றநுபவிப்பார்கள் இது வர
ன்குணமாம்...................................*

இரச்சுவிற்றோன்றிய சற்பத்தை யாப்தவாக்கி
யத்தாற் றிடமாய் ரச்சுவென்றறிந்தபின் பொரு
காலத்திலு மதைசற்பமென் றறியமாட்டாதவர்
போல் ஸச்சிதானந்தகனமான பிரமமாகியதன்னி
டத்திற்றோன்றிய பிரபஞ்சத்தைக் குருசொன்
ன சுருதியுக்திஸ்வாநுபவபெலத்தாற் பிரமமாகிய
தானேயென்றறிந்தபின் பொருகாலத்திலு மதை

ப்பிரபஞ்சமென்றறியமாட்டார்கள் ஆனால் விவ
காரகாலத்திற்றெரிந்தவன் ரச்சுவைத்தவிர சற்பம்
வேறில்லையென்றனுபவிப்பதுபோல் இவர்களும்
விவகாரகாலத்தில் ஸச்சிதானந்தகனமான வானந்
தக்கடலாகிய தன்னைத்தவிர ஜகம்வேறில்லையென்
றே யனுபவிப்பார்கள் இதுவரியான்குணமாம்.*
நினைவோடுமறிந்து கண்டத்தின்மாலையா யலங்
கரித்துக்கொண்ட ரச்சுவை சற்பமென்றுவது ச
ற்பமில்லையென்றுவது இரச்சுவென்றுவது யா
தொன்றுமெண்ணுமலெப்படி ஸ்வபாவமாய்ச்ச
ஞ்சரிப்பார்களோ அப்படியே ஏகமாய்-நிஷ்கள
மாய்-நிற்மலமாய்-ஸ்வயஞ்சோதியாய் ஸச்சிதான
ந்தகனமான தன்னிடத்திற் பிரபஞ்சமென்றுவது
பிரபஞ்சமில்லையென்றுவது தானென்றுவது யா
தொருவிருத்தியுமற்றுச்சஞ்சரிப்பார்கள் இதுவரி
ட்டன்குணமாம்..............................*
இதில்-வித்து-வரன்-வரியானென்ற இம்மூவர்க
ளுக்கு மகண்டாகாரவிருத்தியென் னுஞ் சாதனமூ
ண்டு-ஆரூடனுக்கந்த விருத்தியுங்கூடக்கிடையாது
அம்மூவர்களுக்குஞ் சாதனமானவகண்ட பிரம
விருத்தியானது ஸ்புரணபேதத்தால் வகையொன்
றுக்கு நான்குவிதம் பன்னிரண்டுபேதமாகும் அ
ந்தஸ்புரணங்களை ஸ்வப்பிரதானமென்றும் அஸ்
வப்பிரதானமென்றும் ஸமப்பிரதானமென்றும்
மூன்றுவகுப்பாய்க்கூறப்படும்.................*
இந்தஸ்புரணங்கள் ஒவ்வொன்றும் மூன்றுபே



தமுடையதாகும். அவைகளில், ஸ்வப்பிரதானமா
வது - நான் பிரமமென்ற வகண்டவிருத்தியாரூட
சைதன்னியவுபாசனையில் நானென்றுவிளங்கிய வி
ருத்தியே அகண்டமாயிருப்பதாற் கடங் கலசமெ
ன்ற விவகாரமெப்படியெனத்தெளிந்து விருத்தி
யும் ஜடமானதால்,ஞாதுரு-ஞான-ஞேயமற்றஸ்வ
ரூபஞானமே, கடமென்றதின்பொருள் உள்ளப
டி மண்ணென்பதுபோல், நான் பிரமமென்றதி
ன்பொருளாசவறிந்து-உபாசிக்கின்றது.........*
அவ்விருத்தியில் உபஹிதசைதன்னியத்தை வி
சாரித்தறியாமல் விருத்திமாத்திரத்தை யுபாசிக்கி
ன்றது அஸ்வப்பிரதானமாம்...............*
அவ்விருத்தியுஞ்-சைதன்னியமும் - ஒருக்காலு
ம்பிறிந்திடாது. அக்கினியும் உஷ்ணமும்போலொ
ன்றுதான் விருத்திகாணப்படாவிடத்தி லொடுங்கி
நின்றதென்றது ஸமப்பிரதானமெனப்படும்..*
இதில் ஞேயத்தையிப்படியே மூன்றுவிதமாயு
ம் ஞானத்தை மூன்றுவிதமாயும்-ஞாதாவை மூன்
றுவிதமாயு முபாசிக்கவேண்டும். ஞாதுருஞான
ஞேயமென்பதுவிருத்தியையபேக்ஷித்ததால்விரு
த்தியென்பது குணத்தையெதிரிட்டுவந்ததாற் கு
ணங்களும் மூன்றுவிதமானதாலுமதுகளையு மப்ப
டியேவுபாசிக்கவேண்டும்.....................*
முக்திகளிற் சீவன்முக்தியென்றும் விதேகமுக்தி
யென்று மிருவகைமுக்திகளிருக்கின்றது- இவைக
ளிற்றேகமுள்ளபோது சீவன்முக்தியென்றும் அ

துநீங்கினகாலத்தில் விதேகமுக்தியென்றும் விவகரிக்கப்படும்..................................*

சீவன் முக்தர்களுக்குப் பிராரப்தமானவுடலுள்ளமட்டுந்தான் முக்தனென்கிற வகங்காரந்தனக்குள்ளே தோற்றுமானதாலிவர்களுக்குப் பிராரப்தஞ்சொல்லப்படும்..................................*

அதிகாரியின்பேதத்தாற்றேகமுள்ளபொதேவிதேகமுக்தியுங்கூடலாம்- இவர்களுக்கஃதுள்ளபோதே பிராரப்தங்கிடையாது எதினாலென்னில் இவர்களிடத்தில் முக்தனென்றுவது பெத்தனென்றுவது தானென்றுவது பிரமமென்றுவது யாதொருவிருத்தியுமில்லாததனாலும் எக்காலத்திலும் ஸ்வயமகண்டரஸமாயிருப்பதினாலுஞ்சரீரம் நசித்தபின்பு தேகிசரியாய்ப்போவதினாலும் பிராரப்தமில்லையுடலுடனிருக்குங்காலத்தின்மாத்திரஞ்சுகதாரதன்மியமுண்டு இவ்விதமான முக்தர்களுக்கு விதிநிஷேதங்களை வேதங்களிற்கூறமாட்டாது இவர்களெவ்விதமானதொழிற்செய்தாலுஞ்செய்கையுஞ்செய்விக்கையுமற்றேயிருப்பார்கள் இவ்விதமானவர்கள் ஸ்திதியெப்படியொ அப்படியே இதுவேவேதாந்தங்களின்முடிவாகும்..........................*

மூன்றுவதுபிரகரணம் முற்றிற்று.

---

உ

சுவாநுபூதிரஸாயனம்.

௪—வது ஸர்வமதநிரூபணப்பிரகரணம்.

---

ஒருகுருவினிடத்தி லப்பியாசித்த வெகுசீஷர்கள்-தம்-தம் அனுபவத்திக்குத்தகுந்தபடி பேதமானசாஸ்திரங்களையுண்டுபண்ணநானாவாய் மதங்களுண்டாயொன்றுக்கொன்று விவாதமுண்டாகி யாத்மநிலையையறியாமல் ஜகத்திற்சாகங்காரிகளான மதவாதியர்கண் மதங்களையுள்ளபடி நிரூபித்திருப்பதினா லிந்தசாஸ்திரத்தில் ஆத்மநிலையையுள்ளபடியுபதேசிக்கப்படுகின்றது சுருதிகளின் சம்மதப்பிரகாரம்யுக்தியனுபவத்துடனுங்கூட, அகண்ட ஸச்சிதானந்தபிரமமாகிய திவ்வியமங்கள தேஜோவிச்கிரகரானபரமகுரு, தாபத்திரயத்தால்தச்தனாயுள்ள சீஷர்களினாற் பிரார்த்திக்கப்பட்டுபதேசிக்கின்றார்

வாரீர் மாணாக்கர்களே ஆத்மஞானத்தைத்தவிர வேறெதுகளினாலுந்துக்கநிவர்த்திக்குப்பதி லுபாயமில்லாததினா லதுமிகவுமரிதானதால் மிகவும்வணக்கத்துடன் யாதாய்க்கேட்கவென அப்படியேயென்றார்கள்..................................*

ஆசரியர், உலகத்தில் நான்-என்பிள்ளை-என்பெண்டு-என்மாடு-என்வீடு-என்தனம்-என்பந்துவென்றவபிமானத்தா லதுகளின்கூடுதலாலுங் குறைதலாலுமுண்டான சுகதுக்கங்களை யந்தந்தக்கூடுதல் குறைதல்களையுந் தன்னிடத்திலாரோபித்து நான்

கெட்டுப்போனேன் நானின்றைக்குத்தான் ஜனித்தேனென்றுவெகுவிதமாயுள்ள பிராந்திவாசனையால், சுடுகையுள்ளஜலத்திலக்கினியின்சம்பந்தத்தால்ஜலத்திற்சூடென்றுங்குளிர்மையேஜலத்தின் ஸ்வபாவமென்றறியாமல் உஷ்ணமே ஜலஸ்வபாவமென்பதுபோல், நானென்கிறதன்னையறியாமற் றுக்கமுண்டாயிற்று, ஆகையாற்றுக்கமானமரணத்தைக்கொடாநின்ற சர்பத்தையெப்படித்தெரிந்தோர்கள் நாடார்களோ அப்படிப்போல் என்னுடையதென்கிற மமதையைவிட்டுத்தான்மாத்திரமாய்த்தனித்திருந்தாற்றுக்கங்கணீங்கிசுகக்கடலாடுவாயென

சிஷ்யர்கள், வாரீர் எங்களை ஜனனக்கடலினின்றுங்கடத்தி ஈடேற்றவந்த பரம்பொருளே யருளியதிசரியே ஆனாலும் மமதை நீங்குமுபாயங்கூறீரென-

ஆசிரியர்-ஜகமெல்லாம் நான் என்னுடையது - ஆண்-பெண்-புண்ணியம்-பாவம்- சொற்கம்- நரகம்-காரணம்-காரியம்-சுகம்-துக்கம்-ஞானம்- அஞ்ஞானம்-பேதம்-அபேதம்-ஆசாரம்- அனாசாரம்- ஜனனம்-மரணம்-பந்தம் - மோக்ஷம்-யென்றிவ்விதமாய்விளங்குகின்றதை யுள்ளபடி பிரத்தியக்ஷவிரோதமன்னியிலிவ்விதமாய் விசாரிப்பிக்கின்றோம். ※

நல்லது ஜகத்தில் நானென்றும் நானல்லவென்றும் என்னுடையதென்றும் விவகாரத்தில் திருசியமானகடத்தை நானென்றாவது நானல்லவென்றாவது விவகாரங்காணப்படாததனால் மானிடர், மற்றெல்லாவஸ்துக்களையுமென்னுடையதென்று தனக்கன்னியமாயனுபவிக்கப்படுவதாலவைகளெல்லாமாத்மாவானதானாகான் ........................... ※

கடமுதலானவைகளுடையுங்காலங்களில்-த்தனக்குஸ்வபாவமாயாதொருகுறைதலுமில்லாததுபோற் பந்துக்கள்முதலான சகலங்களுக்குமுண்டான சுகதுக்கங்களை ஸ்வபாவமாய்த்தன்னிடத்திற்காணாததனால் அவர்களுந்தானான ஆத்மாவாகமாட்டான்;

அவர்கள் கெடுங்காலத்திற்-றுக்கமும், லாபகாலத்திற்-சுகமுமுண்டாவதினால் அவர்கள் நாமெப்படியாகமாட்டோமென்றால், தேசாந்திரத்திலிருக்குங்காலத்திலவர்கள் சுகதுக்கங்கள்தெரியாததனாற்றானாகானென்றோம், ஆகையாலன்னியர்கள॥மேலநம்முடையவாளென்றும், அகமென்றும், விவகரிக்கப்படுமானதால் மிஞ்சினதாய் சகலங்களையும்வகுத்ததிந்த வுடலேதானாவான் ........................... ※

ஆனால், உடலானதன்னிடத்திலும் நானென்றும், என்னுடல்-என்கை-என்கால்-என்கண் - யென்றுவிவகாரங்காணப்படுவதாலிதுவும் நாமாவோமாவென்றால், தேகத்திலெந்தவிடத்தில் வேதையுண்டானபோதிலுஞ் சுகதுக்கங்களைத்தானே சமமாயனுபவிக்கிறதினால் உடலேதானாவான் ஆனதாற்றன்னைத்தவிர மற்றதுகள் துக்கங்குடுக்கத்தக்கதென்று யோசித்தனுபவித்தவைகளைத்தள்ளவேண்டுமென ........................................ ※

மாணாக்கன், ஆத்மாவொருவனே யவனைத்தவிர வேறில்லையென்று உபநிடதஞ்சொல்லுகிறதில்

நீங்கள்மூவகையாய்ச்சொல்லுகிற தெப்படியென,
ஆசிரியர்-விவகாரபேதத்தால் பரமார்த்தமென்று
ம்-அபரமார்த்தமென்றுமிருவகைப்படும். அவற்
றுள்ப்பரமார்த்தமாவது பிரத்தியக்ஷானுபூதியிற்ப
ஞ்சபூதங்களைத்தவிர வேறேயாதொருவஸ்துவையு
ங்காணாததனாலும் அதுகளே யதிற்ஷ்டவிசேஷத்
தாலங்கங்கேயொன்று கூடியதுகளின்பேதகுணமு
டைய,வெத்திலை-பாக்குச்-சுண்ணமிவைகளின்சே
ற்கையின் சிவப்புப்போல், சேற்கைவிசேஷத்தா
லறிவுஜெனித்தது அதனாற்சகல விவகாரங்களுமு
ண்டாயிற்று, அந்த அறிவும் அர்த்ததினமில்லாத
தாயும் அர்த்ததினம் பேதத்தைத்தோன்றுவிக்கிற
தாயும் அப்பிறத்தியக்ஷமாயும் நான்-அவன்-இவ
ன்-எனதென்ற பேதத்துடன்றுக்கங்களைக்குடுப்ப
தாயும் என்னறிவென்றுவேறுபடுவதாயும் அபபே
தமான அறிவுதவிர்ந்தவிடஞ்-சுகதுக்கவாதையில்
லாததாயும் பேதமற்றபூரணமாயுமிருப்பதா லந்த
வஸ்தையே பரமாத்மா அதுவேபரமார்த்தம். இதி
ல் நானென்றும் எனதென்றும் விவகாரமில்லாதத
னால் நிர்விகாரி யதனால்நித்தியம் அவனே தன்னி
டத்திற்தோன்றிய பேதமான அறிவாலனுபவிக்க
ப்படு முடலேகண்டமானதா லாத்மாவென்று கூ
றினோம் இவனொருவனே மோக்ஷத்தினதிகாரி.*

ஆகிலுமவன் வெகுபேதம்போற்றோன்றின
போதிலும் ஆகாயத்திற்றோன்றிய சந்திரசூரியா
ளுடைய இல்லாத பிரதிபிம்பமெங்கும் வெவ்வே



றாய் ஜலத்திற்றோன்றி ஜலமென்றும் பிரதிபிம்
பமென்றுஞ் சூரியனென்றும் விவகரிக்கப்பட்டு
ஒருஜலத்திற்றானே யெப்படி பேதந்தோன்றுகின்
றதோ அப்படியேதன்னிடத்திலில்லாதுதோன்றிய
பேதஅறிவாலாத்மாவும் வெகுபேதம்போற்றோ
ன்றுகிறான் அவனபரமார்த்தத்திலாத்மாவாவான்

மற்றமிருகமுதலானவைகளுக் காத்மாவையுள்
ளபடி விசாரிக்கயோக்கிதையில்லாததனா லவைக
ளனாத்மாவாகலாம் பரமார்த்தத்திற் பஞ்சபூதங்க
ளானவாத்மாவைக்காட்டிலும் வேறில்லாததனாலது
களையும் பரமாத்மாவென்றுவிவகரிக்கலாம்......*

அதிலாத்மாவுக்கு விவகாரத்தால்வந்த ஜாதிமுத
லானவைகளைக்கூறுதல், ஆணென்றும்-பெண்ணெ
ன்று மிரண்டுஜாதிதவிர வேறில்லை-ஆனாற்சாஸ்திர
ங்களிலனேகஜாதியாய்ச்சொல்லுகின்றதேயெனின்
எந்தஜாதியிலும் ஆண்-பெண்ணிரண்டைத்தவிரப்
பிரத்தியக்ஷபேதமில்லாததனாலில்லையென்றோம்*

இவைகளும் ஸ்தூலசூக்ஷமபேதத்தால், இப்
போசொன்னது ஸ்தூலமாம்-இனி சூக்ஷமமாவது
பிந்துவென்றும் நாதமென்றுஞ்சொல்லப்படும்ஸ்
தூலத்திலுண்டானதாயும் நானாபேதத்தைத்தோற்
றுவியாநின்ற அறிவும் ஆண்-பெண்-ஜாதிகளான
சூக்ஷமரூபநாதபிந்துக்க ளைக்கியமாகுங்காலத்தில்
நான் எனது ஜாதியென்கின்றசகலமானபேதஅறி
வும் நசித்துப்பூதபஞ்சகமான பரிபூரணமாமாத்
மஸ்வபாவமாகவானந்தத்தைக்கொடுக்குஞ்-சூக்ஷ

மும்பாவமானந்தரூபம் ஸ்தூலமானந்தஜனகம்பு
ண்ணியமாவது அஹிம்ஸையாகும். பாவமாவ
து ஹிம்ஸையாகும். இகத்திலனுபவிக்கப்பட்ட
சுகமே ஸ்வற்கமாகுந்-துக்கமே நரகமாகும். பிந்
துநாதங்காரணம்மற்றஜகங்காரியம் மமதாத்தியாக
ஞ்சுகம். மமதைதுக்கம்-பரமாத்மாவை யுள்ளபடி
யறிவது ஞானம். அதைத்தவிர ஜகமன்னியமென்
றறிகிறதஞ்ஞானம். உலகம்வேறு பரமாத்மாவே
றென்றறிகிறது பேதம். இரண்டுமொன்றுதானெ
ன்றறிகிறது அபேதம். பூதபஞ்சகத்தின் சேர்க்கை
யாற்றோன்றிய அறிவால் நானென்று சரீரமாகவி
ளங்குவதே ஜனனம். நித்திரைசெய்கின்றவன்கை
யிலிருந்து நழுவினபுஷ்பம்போல் சேர்க்கையான
து நெகிழ்ந்து நானென்கிற அறிவு நாசமேமரண
ம்-நானென்கிற யெண்ணமே துக்கத்தைக்குடாநி
ன்ற மமதைக்கேதுவனதா லதுவேபந்தம்-அது
வற்றதேமோக்ஷமென்றிப்படியுபதேசிக்க அவர்க
ளுமப்படியே வெகுகாலம் நிஷ்டைசெய்ய அது
வேயாத்மாவென்று மந்தபுத்தியையுடைய சிலர்க
ள் திர்ப்தியடைந்தார்கள்.....................*

சிலர்களாசரியனை விஞ்ஞாபிக்கிறார்கள், ஸ்வாமி
அதிர்ஷ்டமென்பது புண்ணியவிசேஷத்தாலுண்
டாகப்பட்டது அந்தப்புண்ணியமறிவன்னியிற் சி
த்திக்கமாட்டாததனால் ஜடமான பஞ்சபூதங்களுக்
குஞ்சேர்க்கையெவ்விதமாயுண்டாயிற்றென்றுகே
ட்க ஆசிரியர், நிஜமே யதுபிரத்தியக்ஷத்தில் ஞா



னேந்திரியத்தைத்தவிர வேறில்லாததனாலும் பூத
பஞ்சகத்தின்சுபாவம் ஸப்த-ஸ்பரிஸரூப-ரச-கந்த
ங்களானதால் ஞானேந்திரியங்கள் விளங்குங்காலத்
தில் ஜகமெல்லாம்விளங்குகின்றது ஒடுங்குங்காலத்
திலெல்லாமொடுங்குகின்றதினால் விஸ்தாரமான ஆ
லமரஞ்சிறிதான தனதுபீஜத்தைத்தவிரவேறில்லா
ததுபோல் ஞானேந்திரியத்தைத்தவிர வேறேஜக
மில்லாததாலதுகளே யாத்மாவெனப்படும் .....*

நல்லது அதுகள் வெகுவானதா லெல்லாங்கூடி
யாத்மாவா தனித்தனியாவென (உத்தரம்) அனேகவ
ர்ண்ணபேதங்களுடையரந்தரங்களோடுங்கூடினலாந்
தரினுள்ளெரியாநின்றதீபம் வெளியிலனேகம்பிர
காசமாய்த்தோற்றியுந் தன்னிடத்திலெப்படிவிகார
மில்லையோ அப்படியே ஒன்றுதானே அனேகம்
போற்றோற்றுகின்றதென்றார் சிலர்சரியென்றிரு
ந்தார்கள்...............................*

சிலர்கள்கேட்கிறார்கள் பிராணனொடுங்கிய பிரே
தத்தி லிந்திரியங்களைக்காணவில்லையே ஆத்மா அ
நித்தியமாவென (உத்தரம்) அப்படியே சகலமும்
பிராணனிலுண்டாயிருந்து நசிக்கிறதாலதுவேயா
த்மாவென்றார் சிலரதிலே நின்றுபோனார்......*

சிலர் விஞ்ஞாபனம் அனுபவத்திலடக்கப்பட்டு
ம் விடப்பட்டுஞ் சுழுத்தியிற் பிராணனிருந்தும் ஜ
டமாய்க்காணுவதாலும் பஞ்சபூதங்களுக்குள்ளொ
ன்றாயிருப்பதாலு முன்சொன்ன தோஷமிதில்
வாராதோவென (உத்தரம்)சொன்னதுசரியேபிரா

ணனுடையகமாகமங்கள் சமுசயசங்கற்பரூபமான
மனதிற் சகலமும் விளங்குவதால் இதுவேயாத்மா
வென்றார்........................ ...............*

சமுசயசங்கற்பரூபமானமனமும் உறுதியான
விஞ்ஞானமாம் புத்தியில்விளங்குவதா லதுவே
யாத்மாவாகலாமோவென(உத்தரம்) சரிதானப்படி
க்கில்லாமற்போனால் சங்கற்பமானமனம் விஞ்ஞா
னத்திற்றோன்றி நசிப்பதாலதுவும் நாசமுடைய
தாகும் ஆகையா லாத்மாவாகத்தகாதென்றார்...*

அந்தவிஞ்ஞானமானபுத்தியுமென்னுடையவிஞ்
ஞானமென்றுமமதைக்குவித்தான அகங்காரத்திற்
றோன்றிவிளங்குவதாலதினாலே மற்றதுகள் நாசமு
டையதுகளானதாலும் அகங்காரமே ஆத்மாவாகலா
மோவென(உத்தரம்) அப்படியேயென்றார்.....*

சிலசீடர்கள்சுழுத்தியில் நானென்று அகங்கார
மில்லாததினாலு மற்றயாதொன்றுமில்லாததினாலு
ஞ்சூனியமே ஆத்மாவாகாலாமோவென(உத்தரம்)
அப்படியேயாகலாமென்றார்.......................*

பின்பு சிலசீடர்கள் சாக்கிரத்தில் நன்றாய்த்தூங்
கினேனென்று சுழுத்தியபிமானி யொருத்தனில்
லாமல் விவகாரங்கூடாததினா லவனாலே சகலமுஞ்
சீவிப்பதினாலும் - சுருதிகளிற்ச் சொல்லப்பட்ட
சொர்க்கநரகங்களை செய்யப்பட்டபுண்ணியபாவங்
களாலனுபவிக்க மரணத்தின்பின் சீவனைத்தவிர
வேறேகெதியில்லாததினாலும் - சுழுத்தியபிமானி



யான சீவனே ஆத்மாவாகலாமோவென(உத்தரம்)
அப்படியேயென்றார்...........................*

பின்பு சிலசீடர்கள் சீவர்களெல்லாம் அஸ்வதந்
திரராய்க் காணப்படுவதாலும்- கிஞ்சிஞ்ஞராயி
ருப்பதாலும் பிரகிருதிகளுக்கிராசன்போல் ஸ்வத
ந்திரனாயும்- சருவஞ்ஞனாயும் ஒரு ஈசனிருக்கலாம்
அவனேபரமாத்மாவாகலாமோவென(உத்தரம்)அ
ப்படியேயென்றார்.......... ...................*

சிலசீடர்கள் உபநிடதங்களிலும் யோகசாஸ்திரங்
களிலுஞ்சீவாளையும் பிரமமாகச்சொல்லுவதாற் பி
ன்னங்களானநதிகள் சமுத்திரத்தையடைந்து சமு
த்திரமாத்திரமாய்நிற்பதுபோல் சீவாளுங்கரணகல
விகளைவிட்டுத்துன்பமற்றுப் பரிபூரணமான பிர
மத்திலடங்கி ஆனந்தமயமாயிருப்பதே உண்மை
யான ஆத்மநிலையாகலாமோவென (உத்தரம்) அப்
படியே ஆகலாமென்றார்.........................*

சிலசீடர்கள் அஸ்தி பாதிப்பிரியமான ஸச்சிதா
னந்தஸ்வபாவமாயும் அநிர்தஜடதுச்சமானநாமரூ
பதுக்கஸ்வபாவமாயும் இருவகையாய் விளங்குவ
தால் ஆத்மஸ்வபாவம் ஸச்சிதானந்தம் அனாத்மா
வான ஜகத்ஸ்வபாவம் அநிர்தஜடதுக்கமான நாம
ரூபங்களுமாகலாம் அக்கினியின் உஷ்ணப்பிரகாச
ங்கள்போற் பின்னகுணங்களானதால் ஆத்மானாத்
வஸ்துகள் அனாத்மவஸ்துக்கள் மாயையின்விகார
ம் ஆத்மவஸ்துக்கள் ஸச்சிதானந்தஸ்வபாவமாகி
லும் பிராந்தியாலதின் தருமங்களைத்தனக்குந் தன்

தருமங்களையதற்குமாதிவாசனையாலனுபவிக்கப்படாநின்ற சீவராசிகள் விவேகஞானத்தாற்சேதித்து தன்னைத்தவிர மற்றதை மறந்து தான்மாத்திரமாகவே சம்பூரண ஸச்சிதானந்தஸ்வபாவமாயிருப்பதே சாங்கியசாஸ்திரப்படி நிஜமான ஆத்மநிலையாகலாமோவென - அப்படியேயென்றார்.........*

பின்பு சிலசீடர்கள் உபநிடதங்கள் முடிவையும் ஸ்வானுபூதியையும் யுக்தியாய் நன்றாயோசிக்குங் காலத்தில் ஸச்சிதானந்த ஸ்வபாவமானபிரஞ்ஞையாம்பிரமத்தில்மாயைமுதலான சகலஜடவஸ்துக்களும் அம்புதியில்அலைகுமிழ்நுரைமுதலானதுகள் ஜனித்துவிளங்கி நசித்ததுபோற் றோன்றுகின்றதினால் ஜலத்தைத்தவிர அலைமுதலானதுகளெப்படி வேறில்லையோ அப்படியே பிரஞ்ஞையாம் பிரமத்தைத்தவிர வேறில்லாததினால்-பழுதையிற்றோன்றிய சற்பத்தைக்கண்டு கடிபட்டு பிராணனிழந்துபோமென்றிருக்குங்காலத்தில் உண்மையானபுத்திசொல்லி யிதையறிந்து ஆச்சரியத்தோடுங்கூடியந்தப்பழுதையைக்கண்டு கையிலெடுத்து அவர்களுக்குக்காண்பித்து அவர்களாலும் ஒப்பப்பட்டு சற்பமென்கிற பிராந்தியைத்தள்ளிப் பழுதைமாத்திரமாயனுபவித்து சுகியாவதுபோல்-ஜகத்பிராந்தியைத்தள்ளி பிரஞ்ஞானகனமான ஏகமாம் பிரமானுபூதியே யெதார்த்தமான ஆத்மநிலையாகலாமோவென்றார்- அப்படியேயென்றார்........*



பின்புசிலசீடர்கள் சுருதியுக்தியனுபவங்களினால் நிர்ணயிக்கப்பட்டும் நிர்ணயிக்கப்படாமலிருக்கின்றதாயும் யாதொருகுறிப்புக்குட்படாததினால் ஒருவிவகாரமுமில்லாததாயுள்ள வஸ்துவைப்பிரஞ்ஞானகனமென்றும் ஸச்சிதானந்தமென்றும் ஏகமென்றும் விவகரிக்கக்கூடாது அநிர்தஜடதிக்கமானஜகத்தையபேக்ஷித்துவந்ததாலதுமுக்காலத்திலுமில்லாததால் அவித்தையால் ஜடமென்றும்வித்தையால் மோக்ஷமென்றும் பிரமமென்றுஞ் சீவனென்றும் அவைகளினைக்கியமென்றுஞ் சகலவிவகாரங்களும், உதித்தசூரியனிடத்திற்றமசுஎப்படியில்லையோ அப்படியேசகலவிவகாரங்களும்ஸ்தோதிதஸ்வப்பிரகாசனான பரமாத்மாவிடத்திலில்லையென்கிறவிவகாரத்தைக்கூட சகிக்கத்தக்கதல்ல ஆகையாலப்படி உண்மையாயிருக்கிறதால் தேவரீரெங்கள்பேரிலருட்செய்துரக்ஷிக்கவேண்டுமென- கிருபைபொருந்திய ஆசரியர்,மிகுந்தசந்தோஷத்தையடைந்து அப்படியேதான் இதுவேசத்தியம்நீயேயுண்மை தெரிந்தவன் நீயேநித்தியானந்தக்கடலாம்பிரமமென்று உச்சிமோர்ந்தாலிங்கனஞ்செய்துயிருவருமிருகண்ணாலுமானந்தபாஷ்பமாமுத்தாரம்பூண்டு புளகொல்லாசமான கவசந்தரித்து மனமுருகிப்பந்தமற்று முக்தியாங்கன்னிதனைத்தழுவி பிரமானுபூதியாமுடிசூடி அசைவற்றசுகமாஞ் சிங்காசனத்தில் திவ்வியமங்களகொலுவிருந்தார்கள்*

பின்புசில சீடர்கள் விழிதிறந்து ஆசிரியனாவ

ணக்கத்துடன்கைகூப்பி விஞ்ஞாபிக்கை-முன்தங்களாலுபதேசிக்கப்பட்டும் முடிவையடையாமற்புத்தியின்பேதத்தால் அததற்குத்தகுந்தபடி பலன்காட்டி அந்தந்தப்படியிலே நின்றுபோனார்களே அவர்களுக்கென்னகெதி அவர்களும் இப்பதவியையடையவல்லவர்களா அதில் எவர்களுக்கென்னபெயர்கள் மதசங்கேதத்தாற்சொல்லியது அவரவர்களுடைய அநுபூதிக ளிந்தச்சாஸ்திரத்திற்சொல்லிய எந்தெந்த அநுபூதிகளிலடக்கமாகத்தெரியுஞ்சகலமுந்தெளிவாகக்கூறவேண்டுமென..........*

ஆசிரியர், அவரவர்களந்தந்தப்படியில்நின்றுபோனபோதிலுங் கெதியுடையவர்கள்தான், அததற்குத்தகுந்தபடி வேதத்திற் பூர்வமீமாங்கிஷாள்மதத்திலிருந்தும் அந்தந்தமதத்திற்சொல்லியபடி ஆத்மாவைவிசாரியாமல் கன்மானுஷ்டானம்பண்ணுகின்ற ஜடகர்மடாளுக்குக்கூட கெதியொப்பப்படுமாகில் இவர்களுக்கு ஆத்மவிசாரணை குருமுகமாய்ச்செய்து அந்தமதத்திலுள்ளபடியனுஷ்டிக்க என்கதியில்லாமல்ப்போய்விடும்- இவர்களிகத்திற் சுகதுக்கரூபமான துன்பமற்றிருக்கிறார்கள் ஜன்மாந்திரத்தில்ப்பூர்வவாசனைபெலத்தா லந்தந்தமதங்களையடைந்து முன்மதானுஷ்டானகுருவாக்கியசிரத்தாபலத்தாற்கூடியமட்டும் சித்தசுத்தியுடையவர்களாய் மேன்மேல் சாஸ்திராநுபூதி பெலாபெலங்களையூகத்தாலுந்தகுந்தகுருக்களையடைந்து அவர்களதிகருணையினாலுமுள்ளபடி கெதியையும் உண்



மையையுங் காலவிளம்பத்தின்பேரி லடையவேசெய்வார்கள்.................................*

தேகாத்மவாதியர்கள் சாருவாகாளெனப்படுவார்க ளிவர்கள்மதம் அத்வைதாநுபூதியி லன்னமயகோசாநுபூதியிலடங்கியது- எப்படியெனின் அன்னமயகோசம் பஞ்சபூதவிகாரமானதால் வியஷ்டி-சமஷ்டியானசகல அன்னமயகோசங்களும் பஞ்சபூதத்தின்விகாரமானதாற் பஞ்சபூதத்தைத்தவிரவேறில்லையென்றறிந்து அதையறியாநின்ற நாம் அதாகோமென்றசோதித அன்னமயகோசானுபூதியிலடங்கிநின்றிடினும் அதற்கு திருக்குவிவகாரத்தை யொப்பாதகுறைச்சலொன்றுமாத்திரம் பேதம்.........................*

இந்திரியாத்மவாதியர்கள் சுகதர்களென்னப்படுவார்க ளிவர்கள்முன்சொல்லியவர்களுக்கு சூக்குமாள் எப்படியெனின்-வியஷ்டி-சமஷ்டிகளான இந்திரியங்கள் பஞ்சபூதங்களில் சத்வ-ரஜோரூபமான தெளிவுகளானதுகளாலும் அவ்விதவிந்திரியங்களும் ஜடமானதாலும் அவைகளாலறியப்பட்ட விஷயங்களில் ஞாபகம் வெகுதினத்தின்பிறகுமிந்திரியங்கள் வைகலியத்தையடைந்து அந்தவிஷயஞாபகம் நானின்னபடி யிவ்வளவுநாளைக்குமுன்னனுபவித்திருக்கிறேனென்று அனுபவத்துக்கு வருவதாலும் ஒருவனனுபவித்தது மற்றொருத்தனுக்குத்தெரியமாட்டாததினாலு மந்தவிந்திரியங்களை நானென்று உண்மையாய்க்கூறக்கூடாது...*

தமுடைய நாதமாயிற்று. அவ்விதநாதம், சைத்தியா
காயத்தையுடைய இச்சாஞான கிரியாசக்தியுடைய
அநுச்சாரிதவர்ணரூபமான நாதமாயிற்று. அவ்
விதநாதம், பஞ்சீகிருதபூதாகாயத்தைச்செல்ல, இ
ச்சா ஞானக்கிரியையென்ற மூன்றானதன்சக்தியா
ல் தான் மூன்றுபாகமாய்ப்பவித்து, அதில் இச்
சாபாகத்தை சைத்தியத்தில்வைத்து - ஞானபாகத்
தை சப்தக்கிரஹணசாமர்த்தியமுடைய சுரோத்தி
ரேந்திரியமாகச்செய்து கிரியாபாகத்தை வாக்கிந்
திரியமாகச்செய்து இந்தவாக்கிந்திரியத்துவாரத
ந்தோஷ்டத்தாலுவாகாதகிரியாசம்புடிதமாய்க்கொ
ண்டு வைகரிவிசேஷணதமாய் விளங்கிநின்றது.※

☞ இவ்விதநாதமே ஐந்துவிதமான வாய்வைச்
சம்பதிக்க அந்தவாயுக்களில் காரணகுணமான நா
தமாகியும், முன்சொல்லிய காரியகுணமான ஸ்ப
ரிசமாகியும் அதின் மாத்திராரூபமான த்வக்கி
ந்திரியமாகியும்விளக்கிநின்றது. அப்படியே மற்
றமூன்றுபூதக்களிலும், காரணகாரியகுணங்களாகி
யும் அததன்பாகமான இந்திரியங்களாகியும்பவித்
துநின்றது..................................※

இந்தப்பிரகாரமே அந்தக்கரணமனோபுத்தி சி
த்தாகங்காரங்களாயும், இச்சாஞானக்கிரியாக்ஷோப்த
நாதததத்துவம், மத்திமபஞ்சீகிருதசாமிய பஞ்சபூ
தங்களைச்செல்ல, அந்தக்கரணமனோபுத்தி சித்தாக
ங்காரங்களாகியும் அததுகளின் அஞ்ஞானசம்சயநி
ச்சய ஆலோசனை அதைக்கொடாநின்ற அஃமெனு



மௌட்டியங்களான தர்மங்களாகியும் பவித்து நி
ன்றது......................................※

☞ இதில், அந்தக்கரணத்திலதிஷ்டான ஞான
சக்தியான பஞ்சபூதங்களின் வியாகிருதசுத்தசத்வ
மும்-மனதில் வாயுவின்கிரியாசக்தியான ரஜோகு
ணமும்-புத்தியில் அக்கினியின்ஞானசக்தியான ச
த்வகுணமும்-சித்தத்தில் அப்புவின்ஞானசக்தியா
ன சத்வகுணமும்-ஆகாயத்தின் கிரியாசக்தியான
ரஜோகுணமிரண்டும்-அகங்காரத்தில் பிருதிவியி
ன் கிரியாசக்தியான தமோகுணமும்-அக்கினியின்
ரஜோகுணமுமாக நிரவிநிற்கும்................※

அந்தக்கரணமென்பது இரண்டுபாகமுடைய
தாம் அஃது சங்கோசவிகாசபேதத்தால், அகங்கா
ராதிகளை யெதிரிடத்தெரிய விகசிதாந்தக்கரணமெ
ன்றும்-ஜகத்சத்தாசூனியமான சுழுத்திவிருத்தியை
யெதிரிடத்திரியக் காரணாஞ்ஞானரூபசங்கோசாந்
தக்கரணமென்றுங் கூறப்படும்....................※

முன்சொல்லிய ஞானசக்தியான சமஷ்டி பஞ்ச
பூதவியாகிருத சுத்தசத்வம்-காரண அஞ்ஞானரூப
மான சங்கோசாந்தக்கரணத்திலும், விகாசரூபாந்
தக்கரணத்தில் ஆகாயத்தின் ஞானசக்தியான சத்வ
மாக நிற்குமென்றறிந்தனுபவிக்கத்தக்கது. இவ்
வித அஞ்ஞானரூபசங்கோசாந்தக் கரணமானது
அவிவேகிகளிடத்தில் அவித்தையாகவும், விவேகி
களிடத்தில் வித்தையாகவும்விளங்கும். அவிவேகி
யென்றால், நான் தூங்குகிறேனென்றவனை விழித்

திருப்பதாயறிவதுபோல - தூங்கினேனென்றதன்
னை விழித்திருந்தவனுயறிய விவேகமில்லாதவனே
யவிவேகி. உள்ளபடியறிந்தவனே விவேகியாம்.※
☞ இந்தப்பஞ்சபூதங்களின் தனதம்சமானமா
த்திரைகளையும்-குணங்களின் மாத்திரைகளையும்-ப
ஞ்சீகரணனந்தரமுதித்த மாத்திரைகளையும் - கார
ணமாத்திரைகளோடுங்கூட, இலக்கமிட்டு அவைக
ளின் ஆவிர்பாவமே (௯௰௬) தத்துவம்- அதின் தி
ரோதானமே பிரளயம்-அவைகளின் அவிவேகமே
பந்தம்-அவைகளின் விவேகமேமோக்ஷமென்றும்
அவைகளின்சங்கோச விகாசரூபாவிர்பாவதிரோ
பாவமுடைய தலங்களால்வந்த நாமங்களுடன் நிரூ
பிக்கப்படுகின்றது.......... ............................※
சத்வம்-இராஜசு-தமசு-சாமியம் - இந்த நான்கும்
நான்குமாத்திரையுடையவைகளாகும். அந்தநான்
கும்நன்னான்கு அம்சமுடையபஞ்சபூதங்களைச்சா
ர,ஒருபூதத்தின் நான்கு அம்சத்தால்(௰௬)மாத்தி
ரையாகி அப்பிரகாரஞ் சகலாம்சங்களாலும் (௮௰)
மாத்திரையாகப்பவித்துப் பூதங்களுக்குப் பஞ்சீ
கரணத்தைத்தோற்றுவித்தது. அவ்வித பஞ்சீகிரு
த பூதங்களிற்றோற்றிய காரியகுணங்களான (௰௫)
மாத்திரைகளைச்சேர்க்க (௯௰௫) மாத்திரைகளாயிற்
று. இதில் அதிஷ்டான சத்தாமாத்திரையைச்சேர்
க்க (௯௰௬) ஆயிற்று. இவ்விதமாத்திரைகள்(௯௰௬)
தத்துவங்களாய்விளங்கி பிரமாண்டங்களாக விவர்த்
தித்திருக்கின்றது இவ்வித(௯௰௬)மாத்திரைகளும்



ஒவ்வொன்று தன்தன் காரணமாத்திரையிலடங்க ச
ருவமும் ஸத்தான அமாத்திரையிலடங்கும்.....※
☞ இவ்விதமாத்திரைகள் ஜகத்தாய்விளங்கியகா
லத்தில் நான்குவகுப்பாய் பகிர்மாத்திரையென்று
ம் - அந்தரமாத்திரையென்றும் - காரணமாத்திரை
யென்றும்-ஸமமாத்திரையென்றுங்கூறப்படும். இ
ந்தநான்குஞ் சிவதிசையில் ஜாக்கிரம்-சொப்பனம்-
சுழுத்தி-துரியம்-இந்த அவஸ்தைகளில் ஜாக்கிரத்
தில் சப்த-ஸ்பரிச-ரூப-ரஸ-கந்த-பஞ்சபூத பாஞ்ச
பௌதிகபஞ்சேந்திரியங்களாக விளங்கிநின்று கூட
ஸ்தேந்திரியமானபாகியமாத்திரை தனதுவிகாசமா
ன சப்தாதியனைத்தையும், தனதுசங்கோச விகாச
விசேஷத்தால் கிராஹியகிராஹகமாக விளங்கிநிற்
கின்றது......................... ...........................※
கூடஸ்தேந்திரியமென்றால், சிரவணாதி ஐந்திந்
திரியங்களிலும் வாக்காதி கர்மேந்திரியங்களிலும்அ
ந்தந்தநாமங்களோடுங்கூட சுரோத்திரேந்திரியம்-த்
வக்கிந்திரியமென்று இந்திரியசத்தைஅநுருகமாய்
வியாபித்து விளங்குவதால், சிரவணாதி உபஸ்தாந்
தம் ஸர்வேந்திரியகோளகங்களையுந் தனதுசத்தை
யால் வியாபித்து கோளகோபாதிபேதத்தால், அந்
தந்த வல்லமையுடையவனுகத்தோன்றி கோளகங்
களில்நின்றும், தனதுவியாபகம் அந்தரமாத்திரை
யின் ஸ்புரணவிசேஷத்தால்த் தன்னிடத்திலடங்கி
நிற்க அவ்விதசங்கோசவிகாசத்துக்காதாரமா யிரு
ந்த இந்திரியசத்தாவிசேஷமே கூடஸ்தேந்திரி

மெனப்படும். இந்தமாத்திரைக்கு ஸ்தானம், கண்டோர்த்வபாகத்தில் அந்தரசிக்வையின் ஊர்த்வப்பிரதேசமானவிந்துவாகாரகோளகவிசேஷமாம்.*

இப்படியே அந்தரமாத்திரையுந் தனதுசங்கோசவிகாசரூபமான மனோபுத்தி அஹங்காரசித்தஅந்தக்கரணமென்றஐந்தையுங்கிராஹியகிராஹகமான தனதுதர்மவிசேஷத்தால் விளங்குவித்து, தனதுகாரணமாத்திராஸ்பந்தவிசேஷத்தால் தனதுவியாபகசக்தியைத்தன்னிடமாய் அடக்கிநிற்கும். இந்திரியசத்தைப்போல இந்தசத்தையும் நான் சங்கற்பித்தேன்-நானிருணயித்தேன்- நான் ஆலோசித்தேன்-நானகங்கரித்தேன் - நானிந்த நான்கையுந்தவிர்ந்திருந்தேனென்று அஹம்ஸத்தை வியாபித்தனுபவிக்கப்படுவதால், மனமுதல்ச்சித்தம்வரை தவிர்ந்த இடம்அந்தக்கரணமானதால், இந்தஅந்தக்கரணாதி ஐந்தாக அததினுபாதியினின்று விளங்கித்தனது பாதிமாத்திரமாய்சேஷித்ததெதுவோ அந்தஹந்தைக்கு அந்தரமாத்திரையெனசங்கேதம். இதினிருப்பு, ஹிருதயகுஹரத்தில் அங்குஷ்டாகாரமாய்விளங்கிய தஹரமத்திமமானவிந்துரூபகோளகவிசேஷமாம்.......................*

அஹந்தையென்றதின்பொருள், அற்பமென்றும்-மத்திமமென்றும்-மகத்தென்றும் - மூன்றுவி...மாகத்தெரியும். மனமுதல்ச்சித்தம்வரை நான் ...ன்னுள்ளடங்கிய அஹங்காரம் அற்பமெனப்படும்.



அந்தக்கரணம் மத்திமமெனப்படும். அஃதையும் வியாபித்துவிளங்கிய அஹந்தைமகத்தெனப்படும்.

காரணமாத்திரையைக்கூறுதல், சமமாத்திரையின் ஸ்பந்தவிசேஷத்தால் மஹாஹந்தை தனதுசங்கோச விகாசரூபமான இரண்டுமாத்திரைகளின்கிராஹியகிராஹரூபமாய்விளங்கியவியாப்திதர்மத்தை, தனதிடமாயடக்கிநிற்கத்தனதுகாரியமாத்திரை காரணமாத்திரையோடுங்-காரணமாத்திரையான தனதுசக்தியால் ஐக்கியப்பட, சர்வோபரமரூப அநிர்வசனீய சுழுத்திசத்தாரூபமாக விளங்கிநின்றதெதுவோ, அதுவே காரணமாத்திரையெனப்படும்.......................*

அத்திசையிலதின் லயவிபரம், பூதங்கள் சப்தாதிமாத்திரைகளோடும் ஞானேந்திரியத்தி லடங்கிநிற்கும், இந்திரியங்கள் தனது மாத்திரைகளோடும் மனோபுத்தி அஹங்காரஞ்சித்தமிதுகளை விழுங்கிய அந்தக்கரணத்திலடங்கிநிற்கும், அந்தக்கரணம் மஹாஹந்தையிலடங்கிநிற்கும், மஹாஹந்தை காரணமாத்திரையில்ஐக்கியத்தையடைந்து காரணமாத்திரைமாத்திரமாய்சேஷித்து நிற்கின்றது, இதுசீவர்களின்னைமித்திகசங்காரம். இந்தமாத்திரையினுதாரம், முன்சொல்லிய விந்துகோளகம் மூன்றுவரணமுடையதாகும். டகிராவரணம், ரஜோகுணம். ஞானசக்தி இவ்விரண்டையுமுடையது. இரண்டாமாவரணம், சத்வகுணம்-இச்சாசக்தி - இவ்விரண்டையுமுடையது. மூன்றுமாவரணம்- தமோகுண

ம்-கிரியாசக்தி- இவ்விரண்டையுமுடையது - இந்த
மூன்றுமாவரணம். காரணமாத்திரைக்கி யிருப்பி
டமாம். குணமென்பது-சிங்காசனம் - சக்தியென்
பது அதிகாரவல்லமை. கீழ்ச்சொல்லியமஹாஹ
ந்தை-காரணசாத்வீகாஹந்தையென்றும் - காரண
ராஜஸாஹந்தையென்றும்-காரணதாம்ஸாஹந்தை
யென்றும் மூன்றுபேதமுடையதாகும்........*

இதையனுபவத்திற்றெரியவிபரம், சுகமாய்த்து
க்கஞ்செய்தேனென்றதில், முன்சொல்லிய மஹா
ஹந்தை காரணசத்வாநுபூதியை எதிரிடசுத்தமாத்
திராநுபூதியுடைய, காரணசத்வாஹந்தையென்று
ம். காரணதமோவநுபூதியையெதிரிட பாதிதஜக
ஞான அதிஷ்டானஞானரூப அஞ்ஞான காடாந்த
காரமான காரணதாம்ஸாஹந்தையென்றும், கார
ணரஜோகுணாநுபூதியையெதிரிட,செய்தேனென்
றகிரியையுடைய காரணராசஸாஹந்தையென்றுந்
தெரியவரும்..............................*

கீழ்ச்சொல்லிய காரணமாத்திரையினநுபூதியில்
ஜகப்பிரதீதியில்லாததனால் ஞானசக்தி இச்சாசக்தி
யிலும், இச்சாசக்தி கிரியாசக்தியிலுமாகலயித்து,
கடம்போல இச்சாஞானசக்தி ஈனமாய்க்கொண்டு
தானுந்தனது ஸ்பூர்த்திரகிதமாய்ப் பவித்து சாம்
மியமாத்திரையாய்விளங்கிநின்றது...............*

இத்திசையே சிவனைமித்திகப்பிரளயம். இதில்க்
கிரியாசக்தியுங்குணத்திரையத்தின் லயத்துடன் ல



இவ்விரண்டுஞ்-சாம்மியமாத்திராரூபமாக விளங்கி
நிற்கும்....................................*

துரியமாத்திரையைக்கூறுதல், முன்சொல்லிய
காரணமஹாசாத்வீகாஹந்தை துரியமாத்திரை
யை யெதிரிட-வர்த்தமானத்தில்த் தூங்குகிறேனெ
ன்றவன் விழித்திருக்கின்றானென்று, அறியப்படு
வதுபோல், பூதகாலத்தில்த்தூங்கினேனென்ற நா
மும் விழித்திருந்தோமெனவே ஆகுகின்றதைத்
தெளிந்து, அவஸ்தாத்திரையத்திலுள்ளடங்கிய - ஸ்
தூலமுதல் சாம்மியம்வரை மாத்திரைகளைச்சோதி
த்து - சாம்மியாசாம்மியகுணத்திரைய சம்பந்தர
கிதபிரஞ்ஞானகனசத்தாமாத்திரமான துரியமாத்
திரையை அஹமென்றனுபவிக்க, அவ்வநுபூதியி
ல் விசாதீயபேதரகித ஸஜாதீயபேதசூன்யசகலஸாக்ஷி
ப்தசாக்ஷிஞானமேதுரியமாத்திரையெனப்படும்

இந்தசாக்ஷிஞானம், நிற்விசேஷமென்றும்-சவி
சேஷமென்றும்-பிரதிபாதிக்கத்தக்கதாகும்- எப்ப
டியெனின், முன்சொல்லிய காரணசாத்வீகமஹா
ஹந்தை-சாக்ஷிஞானத்தையெதிரிட-தான் ஸ்வயம்
ஜடமானவிஜாதீயமானதால் ஞேயமாகத்தெரியும்,
சாரீடரூபவிஜாதீயமான ஞேயதர்மத்தைநீங்கி - த
னது காரணமான சாம்மிய மாத்திரையின் சத்தா
ரூபமான சாம்மியத்தை அநுபூதி விசேஷத்தா
லுடைய - அவ்வநுபூதியில் ஆகாயம்போல் நிர்ம
லமாய் சாக்ஷி ஞானாநுபூதிவிளங்க - அவ்வநு
திதியில்விளங்கிய சாக்ஷிபோதத்தை சாம்மியாநுபூ

திபெலத்தால் அஹமென்று விஜிரிம்பிக்க, அவ்வ
ஹங்காரமும் சாக்ஷிபோதகனமாகவே விளங்கிடும்,
இஃதை விவேகதிசையில் ஆத்மவித்தையென்று
ம்-ஆத்மஞானமென்றும்-சொல்வார்கள், அவிவே
கதிசையில்-அவித்தையென்றும்-அஞ்ஞானமென்
றும்-விவகரிப்பார்கள்...................... ........................*

முன்சொல்லிய சாக்ஷிபோதகனமான அஹந்
தை-போதமயமாய்விளங்கினபோதிலும், அவ்வநு
பூதியில்அது நானென்றஸஜாதீயதர்மந்தோன்றுவ
தால். அவ்விததர்மம் அவ்விததர்மி இடமாகவே
விளங்கும், தர்மியென்றால். தர்மாபிமானமுடை
யவன்இதில் நான்-சாக்ஷி-யெனும் இரண்டுவநுபூ
தியும்-சாம்மியசத்தாசம்பந்தத்தால் ஏகமாய்விளங்
குகின்றது.................................... ........*

சாம்மியசத்தாசம்பந்தமுடைய காரணமஹா
சாத்வீகாஹந்தையில்- அதிஷ்டானஞானம் பிரதி
விம்பிக்க - அப்பிரதிவிம்பஞானத்தை சாம்மியச
த்தையால்-கீழ்ச்சொல்லிய அஹந்தை அஹமெ
ன்றுவரிக்க, அவ்வித அசந்தாநிஷ்ட சாம்மியஸத்
தையை-விமர்சினிசக்தியால் நிஷேதியாமலிருக்கி
ன்றது-அபிமானம், விமர்சினிசக்தியென்றால்- ஆ
லோசனவல்லமை-கீழ்க்கண்ட சாம்மியசத்தை சா
ம்மியமாத்திரையைச் சாரத்தக்கதென - விமர்சிக்க
அஹந்தைமாத்திரந் தனித்துவிடும். தனித்திடில்வி
சாதிய தர்மத்தைச்சார்ந்து பிரகாசமற்றுக் காரண
மாத்திரையி லடங்கிநிற்கும், ஸ்வயம்பிரகாசமான



ஞானமாத்திரஞ்சேஷிக்குஞ் சேஷித்தவஸ்துவே
ஆத்மாவாகும். அஃதேநிற்விசேஷம்-பிரதிவிம்ப
ஞானஞ்-சவிசேஷம் - இஃதேதர்மியாய் விளங்கிநி
ன்றது-இந்தத்தர்மஞானமே-துரியமாத்திரை யெ
னவும் கூடஸ்தமாத்திரையெனவும் - ஆத்மமாத்தி
ரையெனவும் - பரியாயநாமத்தால் விவகரிக்கப்படு
ம், இஃதே (கூ௰௬) மாத்திரைகளாயும் (கூ௰௬)தத்
துவங்களாயும்பவித்து. வியஷ்டி-சமஷ்டியான-ஜக
த்தாகவிளங்குகின்றது- சமஷ்டியைப்பற்றுங்காலத்
தில்-ஈஸ்வரனெனப்படும், வியஷ்டியைப்பற்றுங்கா
லத்தில் சீவனெனப்படும் ..............................*

இவ்விதகூடஸ்தமாத்திரையில் வியாபினீச
த்தியெனவும்-விமர்சினீசத்தியெனவும்- இவ்விரண்
டுசத்திவிவர்த்தித்து அடங்கிநிற்கும், வியஷ்டிசமஷ்
டி ஜகமாய்விவர்த்தித்திருக்கின்ற ஜகத்தை-காரிய
மாத்திரைகளாகப்பவிக்க-ஜகத்சத்தைநீங்கி - காரிய
மாத்திராசத்தையாக விளங்கும், காரியமாத்திரை
யென்றால்-ஸ்தூலம்-மத்திமம்-சூக்குமமாத்திரைக
ளாகும்,இந்தக்காரியமாத்திரையில் ஜாக்கிரஞ்-சொ
ப்பனம்-இவ்விரண்டும் அடங்கிநிற்கும், இஃதைக்
காரணமாத்திரைகளாகப்பிரிக்க காரியமாத்திராசத்
தையைநீக்கிக் காரணமாத்திரைமாத்திரமாய்சேஷி
க்கும், இஃதை சாமியமாத்திரையாகப்பிரிக்க-கா
ரணசத்தைநீங்கி சாமியமாத்திரைமாத்திரமாய்த்த
னிக்கும், காரணசத்தையென்றால்- ஜகத்சத்தா
னியப்பிரதீதியாகும், சாமியமாத்திரையைக் கூட

ஸ்தமாத்திரையாகப்பிரிக்க-சாமியசத்தைநீங்கிக் கூ
டஸ்தமாத்திரமாத்திரமாக சேஷித்திடும், சத்தை
யென்றால்-விளங்குதல், எது விளங்கியதோ அதுவே
இருக்கின்றது, எதெதனால்விளங்குகிறதோ - அத
தைத்தவிர வேறில்லையெனும் ஞாயத்தால், சாமிய
மாத்திராமுதல் சகலமாத்திரைகளும் ஜடமானதா
ல், ஸ்வயம் விளங்குதலற்றதுகளெவைகள் ஸ்வயம்
விளங்குதலற்றதுகளோ-அவைகள் ஸ்வயமில்லாத
வைகள்-ஸ்வயமென்றால் ஸ்வரூபமெனப்படும், அ
கையாற்கூடஸ்தமாத்திரையான சத்தையைத்தவிர
மாத்திரைகள் - ஸசவிஷாணம்போ லில்லையெனத்
தெளியவரும், இங்ஙனமாகில்-ஆத்மாவுக்குக் கூடஸ்
தஸாக்ஷிதர்மமானபார்வையெனும்போதாகாரஸ்பு
ரணமாகக் -கூடஸ்தமாத்திராவிவர்த்தமாய்விளங்கி
நின்றதெனக்கூறியது உபசாரமென் றனுபவியா
மலனுபவிக்கப்படும்...........................❊

அனுபவச்சுருக்கம், முன்சொல்லிய வியாபினீ
சத்தியானது-அஹந்தையென்றும் - இதந்தையெ
ன்றும்-இரண்டுபேதத்தையடைந்து - இதந்தையா
லதின்சங்கோசவிகாச விசேஷத்தால் - ஸகலஜகத்
தையுஞ்சங்கோசவிகாசமுடையதாக ஆவரித்து, ஆ
த்மாவையும் - அஹந்தையின் சங்கோசவிகாசவி
சேஷத்தால்- சங்கோசவிகாசமுடையவன்போலாக
வே ஆவரித்துநிற்குமாப்போல காணப்படும், வி
மர்சினீசத்தியின்-கருணைகடாக்ஷத்தையடைந்து வி
மர்சிக்க - மஹாவிஸ்தாரமுடையஜகம், கீழ்ச்சொ



ல்லிய இதந்தையைத்தவிர வேறில்லையெனவும், இ
தந்தை அஹந்தையைத்தவிர வேறில்லையெனவும்,
சகலஜகத்தையுமிதென்றும் நானென்றும் வியாபி
க்கின்ற வல்லமையுடையது. வியாபினிசத்தியான
தால்-வியாபினிசத்தியைத்தவிர ஜகம் - இதந்தை-
அஹந்தை இவளவுமில்லாமல் - வியாபினிசத்திமா
த்திரமாய்விளங்கிடும், அவ்வித வியாபகசத்தாமாத்
திரமாயுள்ள வியாபினிசத்தி, ஆகாயம்போல்ப்பூர
ணமானதால்-அப்பூரணவல்லமையாம் வியாபினி
சத்தியில்ப் பிருதிவிம்பித்து விளங்கியதைதன்னி
யம்-சோதித-தற்பத-கூடஸ்தப்பிரமமாம், முன்ன
மே நிரூபிக்கப்பட்ட அந்தசோதிதத்வம்பதமான
வ்யஷ்டி கூடஸ்தனையும், சமஷ்டி கூடஸ்தனையும்,
வியாபினிசத்தியில் பிரதிவிம்பித்து விளங்கியதை
தன்னியத்தைத்தவிரவேறில்லையென. ஐக்கியப்படு
த்த-அசிபதார்த்தாநுபூதியான மோக்ஷபதமாகவி
ளங்கும், அஹந்தையும்-இதந்தையும்-முக்காலத்தி
லும் கீழேநிரூபித்த நியாயப்படி இல்லாவிடில், வி
யாபினிசத்தியும் மோக்ஷமுமுபசாரமென - அசிப
தகூடஸ்தனுக்கு விமர்சினிசத்தியால் தெரியவர வி
யாபினிசத்தி நீங்காமல்நீங்க-அதில் அபிவியக்தசை
தன்னியமும் உள்ளபடி அதிஷ்டானமாத்திரமாய்
சேஷியாமல்சேஷிக்க, அபாரகருணைசாகரனான
விமர்சினிசக்தியும் ஞா திருஞானஞேயரஹித நிற்
விசேஷாதிஷ்டானமென்றகூடச் சொல்லத்தகாத
வஸ்துமாத்திரமாய் சேஷித்துநில்லாமல் நிற்கு

மெனவுங்கூடப் பிரதிபாதிக்கத்தகாத வஸ்துமாத்
திரமாயுள்ளபடி அனுபவியாமலனுபவிக்கப்படும்

சரீரஉற்பத்தி, பஞ்சீகரணவநுபூதி, ஸ்திரீபுரு
ஷர்கள் - எதிரிட இருவருள்ளமும் பிரியமாகவுருக
அவ்விதபிரியம்-மோகத்தால் விந்துநாதங்களாகத்
தடித்து கர்ப்பகோளத்தில்-ஸமரஸப்பட அவ்விதப்
பிரேமையே-சுகமாகவிளங்கிற்று, உள்ளமென்பது
காரணமாத்திரைக்கும் - சூக்கும மாத்திரைக்கும்-
பொதுவசனம், எப்படியெனின். சமரசத்தில்-சுக
ங்காணப்படுவதால்-சுகங்- காரணமாத்திரையைப்ப
ற்றினதெனத்தாற்பரியம். சமரசமென்பது-சாமி
யமாத்திரையைப்பற்றினதெனக்கொள்க - அச்சம
ரஸாநுபூதி,சுகமாயிருந்ததெனச்சொல்வதில்-இரு
ந்ததென்றவநுபூதி-விளங்கியதே யிருக்குமானதா
ற்-கூடஸ்தசத்தாமாத்திரையைப் பற்றினதெனப்ப
டும். அதைத்தானே வாக்கிந்திரியத்தால் விவகரித்
து-ஞானேந்திரியத்தாலனுபவிப்பதால்- அச்சமர
சத்தில்-ஞானேந்திரிய- கருமேந்திரிங்களடங்கியிரு
ந்ததெனத்தாற்பரியம். அவ்விந்துநாதசமரசமான
கர்ப்பம்-கோளகத்தில் கனமுடையதாகவனுபவிக்க
ப்படுவதால் பஞ்சீகிருத ஸ்தூலபஞ்சபூதகாரியமா
ன-அன்னரச-சூக்கும-விகாரமே உள்ளத்தின்வழி
யாக விந்துவில்சென்று-சீவகரும பரிபாகவிசே
ஷத்தால் ரக்தமாம்சாதிகளாகவும் - சப்தாதிமாத்தி
ரைகளாகவும்பவித்து-மாத்திரைகளின்- பரஸ்பரப
ஞ்சீகரணவிசேஷமே - ஸ்தூலதேகமாக விளங்குகி



ன்றது, இஃது முன்சொல்லிட-ஜாக்கிரத்திலடங்கி
நிற்கும்விராட்பிரகரணத்திற் பஞ்சீகரணரகசியம்.

௨௰-வது பிரகரணம் - முற்றிற்று.

---

உ

பரமசுந்தரேசகுருவேநம:

## ௨௰௧-வது சருவஞ்ஞ ஞானஉண்மையுரைத்த பிரகரணம்.

சுருதியில் தத்பதத்தின்ஞானத்தாற் சகலபதார்
த்தத்தின் ஞானமும் வருமென்றதின்பயன். தத்
பதத்தின்பொருளான ஈசனை நானென்றறிந்தசிவ
னுக்கும் ஈசனைப்போல் சருவஞ்ஞத்வம்வேண்டு
மே அதுகாணப்படவில்லையேயென்னின்? அவ்வி
தஞானம் பரமார்த்தவிவகாரபேதத்தாலிரண்டுபே
தமுடையதாகும்....................... .........*

அவற்றுள், பரமார்த்தமாவது கானலிற்றோன்
றியஜலம்-பிரவாகம்-அலை-நுரை-குமிழி-முதலான
வைகளை அனுபவவிவேகபெலத்தால் அதிஷ்டான
மானபூமியைத்தவிர வேறில்லையெனத்தெளிந்து
அதிஷ்டானமாத்திரமாயறிகின்றதுபோல், சராச
ரமான சகலஜகங்களையும் நிராகாரசுத்தசின்மாத்தி
ரமாயுள்ள அதிஷ்டானமான தன்னைத்தவிரவேறி
ல்லையெனத்தெளிந்து சுத்தசின்மாத்திரமா யறிகி
ன்றது பாரமார்த்திகசருவஞ்ஞத்வமாம்........*

வியாவகாரிக சருவஞ்ஞத்வமாவது, கானலிற்
றேன்றிய ஜலம்-பிரவாகம்-அலை-நுரை-துமிளி-வி
ஸ்தாரம்-ஆழம் இவைகளைவெவ்வேருய்ப்பரிஷ்கரி
த்து அறிகின்ற சருவஞ்ஞனைப்போல், அதிஷ்டா
னசுத்தசை தன்னியத்திற்றேன்றிய சராசரமானச
கலஜகங்களையும் பின்னபின்னங்களாக அந்தந்தஅ
ந்தக்கரண வியபாரங்களோடும் அறிகின்றவல்ல
மை வியாவகாரிக சருவஞ்ஞத்வமாம்.........*
☞ இந்த இரண்டு ஞானவல்லமையு மீசனுக்கி
ருக்கின்றது. ஈசனை சருவஞ்ஞத்வாதியுபாதியை
யுடையவனக தாதாத்மியோபாசனைசெய்கின்றவர்
கள் ஈசனது வுபாசனைபலத்தால் அவனது வியா
வகாரிகசருவஞ்ஞத்வ குணத்தையடைகின்றார்கள்.
அவனது உபாதியைநீக்கி யதிஷ்டானத்தைமாத்தி
ரந் தாதாத்மியோபாசனைசெய்கின்றவர்கள் பரமா
ர்த்திக சருவஞ்ஞ ளாகின்றார்கள். இந்த இரண்டு
விதமான ஈசோபாசன ஞானவான்கள் இருவகை
சருவஞ்ஞத்தையு முடையவர்களாகின்றார்கள்...*
ஆனல் ஈசனுடையவுஞ் சித்தர்களுடையவும் வி
யாவகாரிகமென்ற சருவஞ்ஞத்வம் பிராந்திஞான
மாவென? உத்தரம், நிற்குணமாய் சுத்தஸன்மாத்
திரமான தனக்கு இரண்டாவதான ஸ்வபாவத்தை
முக்காலத்திலுமெதிரிடாமலிருக்கின்ற ஈசசித்தர்க
ளிடத்திலில்லாததாயுள்ள நானுவான ஜகவிஷயசஞா
னமிருக்குமென்றெண்ணப்பிய சீவர்களின்ஞானம் பி
ராந்திஞானமேயன்றி, ஈசனதுஞானத்தைப்பிரா



ந்திஞானமென்று யாவர்கூறுகின்றார்கள்.......*
ஆனல் முற்கூறியஞான மிருவகையாய்க்கூறப்
பட்டதின் றாற்பரியமேதென? அதிஷ்டானமான
ஸத்தைத்தவிர த்வைதமாய் ஜகமிருக்கின்றது மெ
ன்றெண்ணப்பிய த்வைதஞானியை சுருதியிலீனனாய்
நிஷேதித்திருக்க, சுத்தஸன்மாத்திரமான ஈசனுக்
கு த்வைதஞானம் ஸ்வபாவமாயிருக்கின்றதாக
வொப்பி அந்தஞானம் ஞானிகளுக்கும்வேண்டும்
இல்லாவிடில் அவர்களெங்ஙனம் பிரமஞானியாவர்
கள் என்றுகேட்டதின் றாற்பரியமேதென.......*
நல்லதுதெளிந்தேன், இப்படிக்கெந்தச் சுருதி
யிற் சொல்லியிருக்கின்றதென? எந்தச்சுருதிகளி
லாயினும் இந்த அவிப்பிராயந்தவிர நீகூறிய அ
விப்பிராய மிருக்கின்றதா பாரொன்றாசிரியர்கூற,
மாணக்கன் சகலசமூசயங்களுந்தீர்ந்து ஞாதிரு
ஞானஞேயமென்ற ஸஜாதீய-விஜாதீய-ஸ்வகதபே
தமில்லாத அதிஷ்டானஞானமாத்திரமாய் சருவஞ்
ஞபதவியை அடையாமலடைந்து விளங்கிநின்றான்.

உக-வது பிரகரணம்-முற்றிற்று.

பரமசுந்தரேசகுருவேநம :

உஉ-வது விசிஷ்டாத்வைத நிரூபணப்பிரகரணம்.

நித்தியநிராகார ஸாகாரராய்-நின்மலராய்-சருவ
சம்பூரணராய்-ஸச்சிதானந்தஸ்வரூபராய்-சருவஞ்
ஞராய்-சருவஸ்வதந்திரராயுள்ளவர் ஈசன், அவ்வி

த ஈசன் அபின்னநிமித்தோபாதானனை தன்னிடத்திநின்றுமுண்டானஜகத்தில், அவனே சிவரூபனையும் அந்தரியாமிரூபனையும் அனுப்பிரவேசித்து நிற்கின்றான். அவ்விதஈஸ்வரன்பிரமாண்டத்திக்கு உபரி பிரதேசத்திலிராநின்ற அப்பிராகிருதமானதிவ்ய தேஜோகடிதமஹாவைகுண்டத்தில் மஹாகாரணபூதமனோபுத்திசித்த அஹங்கார தத்வரூபாளான-பிரத்தியும்ன - சங்கர்ஷண -அநிருத்த-வாஸுதேவாளென்று நான்குவிதவியூகமுடையவராயும்-ஸ்வயங்காரண கூடஸ்தராய்-இலக்ஷ்மிசமேதராய்-பிரணவரூப அஷ்டாக்ஷரசக்கரமத்தியிலிருந்துவிளங்குகின்றார், அவருக்குப்பரநாராயணரென்றுந்திருநாமமாம்.......................※

சைதன்யரூபமான அவரது ஸ்வபாவம்போல், அவரது சரீரமும் ஸச்சிதானந்தமாம். அவரது சரீரம் வைகுண்டத்திலிருந்திடினுந் தனது நிராகாரமான சைதன்யத்தன்மையால் ஜகவியாபகராயிருக்கின்றார். அவ்வித ஈசனை மரணாந்தம்ஸாகாரமாத்திரமாயுபாசித்தால்ப் புராணங்களிற்கூறிய விரஜையென்றநதியிற் சூக்ஷ்மசரீரத்தால்முழுக திவ்யசரீரவனுப்பவித்து. உபாசனைக்குத்தகுந்தபடி வைகுண்டத்தைச்சென்று - சாலோக-சாமீப-சாரூபாதிமுக்தியையடைந்து ஈசனது சேவைசெய்துகொண்டு நித்யதிர்ப்தாளாய்விடுகின்றார்கள்.※

நிராகாரசாகாரவுபயரூபமுள்ளவரொன்று அந்தச் சாஸ்திரத்திற் சொன்னபடியறிந் துபாசித்தவர்கள்



ஸாரூபமுக்தியையடைந்து அதினின்றுஞ் சாயுச்சியபதத்தையு மனுபவிக்கின்றார்கள். ஸாயுச்சியமுக்தியென்பது நிராகாரத்தைப்பற்றினது. அவ்விதநிராகாரோபாஸனையெங்ஙனமெனின், நிராகாரவியாபகசைதன்யமான ஸருவநியந்தாவாயுள்ள பரநாராயணர் பூரணரானதால் அங்குஷ்டமாத்திரமானபரிணதசுத்தஸத்வாகாரதஹரோபாதியால்அவ்வித அவச்சேதமுடையவராகத்தோன்ற சாஸ்திரயுக்தியனுபவங்களாலவ்வித அந்தரியாமியைப்பஞ்சகோசாதீதனாக விசாரித்து சிருஷ்டிகாலத்தில் ஜகத்தையனுப்பிரவேசித்தஸருவவியாபகஸச்சிதானந்த நிராகாரஸாகாரரான பரநாராயணரே தன்ஸ்வரூபத்தாலும் வல்லமையாலும் அந்தரியாமியென்னுந்தன்மையுடையவராகக்காணப்படுவதால், கீழ்ச்சொல்லிய பஞ்சகோசாதீதராய்விசாரித்த அந்தரியாமி - சரீரத்திலுள்ளடங்கியிருந்தவராய்த்தோன்றினபோதிலும் வியாபகநாராயணராய் விசாரித்து அது நீயாகின்றாயென்று ஐக்கியமாகவுபாசிக்கவேண்டும். அதுவென்றால் அந்தநாராயணர்-நீயென்றால் அந்தரியாமியான நீ-இதின்பயன்சீவர்களை சரீரமாகவுடையவனாகின்ற நீ ஆகின்றாய்-அவனைக்காட்டிலுநீவேறில்லை. இந்தப்பிரகாரம் ஆசரியர் முகமாயுபதேசிக்கப்பெற்று அந்தவுபதேசபலத்தாலுபாசிக்க மரணானந்தரம், உபயவித்தியாபலத்தால் வைகுண்டத்தில் ஸாரூபமுக்தியையுடையவனுப்பவித்து ஸாயுச்சியரூபமான ஸருவ

வியாபகநாராயணவியாபகமான நிராகாரஸ்வபாவத்தையுஞ் சங்குசக்கிரதாரியான ஸாகாரரூபத்தையும்ஸேவியஸேவகபாவத்துடன் அனுபவிப்பார்கள்

☞ இந்தமதத்தில் ஸ்தூலஜகம்நித்தியம், சூக்ஷமஜகஞ் சத்தியம், என்றொப்பவேண்டியதற்காகவே நாராயணருக்கு ஸாகாரஸத்தியத்வமொப்பினார்கள். நாராயணரதிவியாபகம் நித்தியமென்றதின்பொருட்டு சூக்ஷமஜகத்துக்கு ஸத்தியத்வமொப்பினார்கள். கேவலநிராகாரமான ஆகாயஞ்சடமானதால் அப்படி வஸ்துவுஞ்சடமாய்விடத்திரியுமென்று ஈசனுக்கு ஸாகாரத்வமுமொப்பினார்கள். பரிச்சின்ன நிராகாரஸாகாரசீவர்களைவேறாகக்கூறுவதின்பொருட்டு ஈசனுக்கு நிராகார ஸர்வவியாபகத்வமொப்பினார்கள்..............................❊

☞ இந்தமதத்திற்சொல்லிய வுபயரூப அனுபவமெங்ஙனமெனின், ஒரு பீஜத்திற்றோன்றிய ஒரு விருக்ஷம்-பத்திரம்-புஷ்பம்-பழம்-சாகை முதலானவைகளுடன்கூடி ஸ்தூலமாய்விளங்குங்காலத்திலும்அந்தவிருக்ஷஸத்தையை பீஜஸத்தைவியாபித்திருக்கின்றது நசித்தகாலத்திலுந்தன்னுள்ளடங்கிய சூக்ஷமமானவிருக்ஷஸத்தையைவியாபித்திருக்கின்றதெப்படியோ அப்படியே, ஸ்தூலரூபமாய்விளங்குங்காலத்திலும், ஸ்தூலரூபம்நசித்து சூக்ஷமமாய்விளங்குங்காலத்திலும், அந்தரியாமியானதன்ஸ்வபாவத்தால் ஜகத்தை வியாபித்துக்கொண்டிருக்கின்றானென்பதாம். ஆனாலிந்தமதாநுபூதி



யானது அத்வைதத்தில் இரண்யகர்ப்பாநுபூதியிலடங்கியது ஸேவியஸேவகபாவமொப்பியதுமாத்திரம் பேதம்... ..............................❊

௨௨வது-பிரகரணமுற்றிற்று.

## ௨௩-வது த்வைதமதநிரூபணப்பிரகரணம்.

இவர்கள்மதத்திற்சிருஷ்டிபேதத்தால்வந்த சீவபேதமும் முக்திபேதமும் முக்தியாற்கிடைத்த ஆனந்தபேதமும் உடலுடையதாக ஒப்பினார்கள்...❊

சிருஷ்டிபேதமாவதென்ன? தாமதசிருஷ்டி-ராஜதசிருஷ்டி-ஸாத்வீகசிருஷ்டி- மிசிரசிருஷ்டியென்று நான்குபேதமுடையதாகும். அவ்விதசிருஷ்டிக்குட்பட்ட சீவர்களும் நான்குவகுப்புடைய (௮௰௪) லக்ஷயோனிபேதமுடையவர்களாய்ப்பவிக்கின்றார்கள். சிருஷ்டிக்கப்பட்டஜகத்தை அனுப்பிரவேசித்த ஈசனது லக்ஷணம்-உபாஸனை-இரண்டும் விசிஷ்டாத்வைதத்திற்சொல்லியபடிதான். முக்திகாலத்தில் ஆதிசிருஷ்டியிலெந்தகீடாதிமுதற் றேவஜாதிவரையிலும் ஜனித்தார்களோ, அவ்விதஜாதிக்கித்தகுந்த அப்பிராகிரதவுடலுடையவர்களாக மரணாந்திரம் விரஜையில் ஸ்நானம்பண்ணினபிறகு பவித்து வைகுண்டத்தைச்சேர்ந்து ஸாரூப்பியமுக்திநீங்கலாகமற்றமுக்திகளை அடைகின்றார்கள்.

அந்தந்தசீவர்கள்தஹரம் அற்பமாயும்விஸ்தாரமாயும் அந்தந்தவுடலுக்குத் தகுந்தபடி அங்குஷ்டமாத்திரப்பிரமாணமாயிருப்பதால், அதிலனுப்பிர

வேசித்துவிளங்குகின்ற அந்தரியாமியான நாராயணஸ்வபாவம் பூரணமாயினும்சீவர்களின் தஹரத்திலனுப்பிரவேசித்த அந்தரியாமியின் ஸ்வபாவம்பரிச்சின்னமானதால் தஹரதார தன்மியத்துக்குத்தகுந்தபடி சீவர்களின் விஷயானந்ததாரதன்மியம்போல், முக்திநிலையிற்கிடைத்த அவர்களதுஆனந்தமும் தாரதன்மியமுடையதுதான்..............*

அவர்களுக்குபதேசவிபரம்.(அதத்து)நீயாகின்றாய் ஸ்வயஞ் சீவஸ்வபாவமான நீ (அதத்து)நாராயணஸ்வபாவபின்னஸ்வபாவமாக,ஆகின்றாய்-என்ற இந்த த்வைதம் விசிஷ்டாத்வைதத்திலடங்கியது-விசிஷ்டாத்வைதம் தாந்தரிகசித்தாந்தத்திலடங்கியது-சித்தாந்தம் வைதீகத்திலடங்கியது-இவ்வித வைதீகசித்தாந்தமென்றும் அத்வைதமென்றும் நாமமுடைய அத்வைதமே வைதீகம், மற்ற ஸகலமதங்களும் அவைதீகமெனப்படும்...................*

☞ இந்தமதங்கள் வேதவிரோதமானதால் முக்கியமாய்ச்சுருதியில் அனதிகாரிகளான அதிகாரிகளுக்குபகாரப்படும். இவர்கள்மதத்தில்த்தாந்திரத்தில் சுருதியினபிப்பிராயமடங்கிநிற்கவேண்டுமெனத்தாற்பரியம். அத்வைதத்திற் சகலசாஸ்திரங்களுஞ்சுருதியி லடங்கிநிற்கவேண்டுமெனத்தாற்பரியம். இப்படியென ஆசரியர், மாணாக்கன் வேதத்தினுண்மையான அத்வைதத்தை வெகுபெருமையுடையதாக அறிந்து தன்னிஷ்டனானான்........*

௨௩-வது பிரகரணமுற்றிற்று.

பரமசுந்தரேசகுருவேநம :.

௨௪-வது ஸ்திதானுபூதிப்பிரகரணம்.

பரிபூரணத்தியானஞ்செய்துகொண்டு அதையெங்கும் அறிவுக்கண்ணால் நிதானித்து வியாபித்துப்பார்த்தனுபவித்து பின்பு அந்தஅறிவானபார்வையைமுன்சொன்னபூரணத்திக்கும்பூரணமானஞானமென்றறிந்து அந்தஅறிவுமாத்திரமாய்நிற்க, அந்தப்பார்வையும்நீங்கிவிடும் அப்பார்வைநீங்கினவிடம் நிற்குணப்பிரமமாம்.........................*

அவ்வநுபூதியிலிருந்து ஞாபகமுண்டாக யாதொரு எண்ணமுமில்லாத நிற்குணஞானஸ்வரூபப்பிரமமாத்திரமாயிருந்தோமென்றும் பூரணத்திக்கும் பூரணமானபார்வையாயிருந்தோமென்றமனுபவம்வருகிறதாற் பூரணசைதன்னியஸாக்ஷியானபார்வையாற்பார்த்ததால் நாம்பார்த்தவனென்னப்படலாம். பார்வையுமில்லாதவிடத்தில் நாமிருந்தோமாவெனின், ஞானமன்றியறியக்கூடாததனாலும் எண்ணமில்லாதவிடத்தைத்தானேயனுபவித்துச்சொல்வதினாலும் பாதிக்கப்படாதவனுபவமானதினாலும் நானென்கிறவகங்காரவிருத்தியுமில்லாததாயும் நானென்கிற அகங்கார விருத்தியின் உண்மையாயுமுள்ள நிற்குணஞானப்பிரமஸ்வபாவமான நான்மாத்திரமா யிருந்தோமென்றறிந்து, பின்பு சாக்கிர-சொப்பன-சுழுத்தி-மூன்றையுமறிந்தவனை நிதானிக்கவேண்டும்...........*

☞ இதிற் சாக்கிரத்தையறியும்விபரம். பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயம்-இதின்குணங்கள்-சப்த-ஸ்பரிச-ரூப-ரஸ-கந்த-மானஜகம்- இவைகளின்விகாரமானபடியினாலே இதுகளைக்கிரிகிக்குஞ்சாதனங்கள். சுரோத்திரம்-த்வக்கு-நயனம்- ரசனை-கிராணம்-இந்தஐந்தும்-ஞானேந்திரியங்களெனப்படும். இந்தஸாதனங்களைக்கிரிகிக்குஞ்சாதனம்-அந்தக்கரணம்-அதின்விருத்திகள்-மனம்-புத்தி - சித்தம்-அகங்காரம்-இவைகளினிரூபணம்............*

சுரோத்திரமானது மனதோடுங்கூடி சப்தத்தையும் த்வகிந்திரியமானது மனதோடுங்கூடி ஸ்பரிசத்தையும்-நயனேந்திரியம் - மனதோடுங்கூடிரூபத்தையும்-ரஸனை-மனதோடுங்கூடிரஸத்தையும்- கிராணம்-மனதோடுங்கூடிகந்தத்தையும்-கிரிகிக்கும், மனதென்பது அகாரணமாய் ஸம்சயத்தன்மையுடன்சங்கற்பமுடைய அறிவு- புத்தியென்பது, உறுதித்தன்மையுடன் நிச்சயரூபசங்கற்பமுள்ளஞானம்-சித்தமென்பது-முன்னடந்ததையும் பின்னடக்கவேண்டியதையும்-இப்போநடக்குறதையும்பற்றிப்பரியாலோசனைசெய்கின்ற சங்கற்பஞானமாகும்-அகங்காரமென்பது-ஸகலவியாபாரங்களையுமபிமானித்து நிதானிக்கவல்லவன் நானென்றசங்கற்பஞானமாம்..........................*

இவளவையும் பேதமன்னியில்த்தன்னையுள்ளபடியறியாமல்-நான்-எனது-யென்ற அபிமானத்துடன் இவைகளில்விளங்கிய அறிவுசீவனாவான், இவ



ளவும் விகற்பமற்ற எண்ணமில்லாதகாலத்திற்கூட அறியுந்தன்மையுடைய ஞானங்கூடஸ்தனாவான்*

☞ இவர்களை சாக்கிரத்தில் யுக்தியாயனுபவத்துடன்-எல்லாப்பதார்த்தங்களிலு மிருக்கிறதருமைப்படியறியவிபரம். ஜாக்கிரத்திற்கண்ட ஜகம் பஞ்சபூதரூபமானதாற்பஞ்சபூதங்களிலுள்ளடங்கியபஞ்சவிஷயங்களும் அவைகளைத்தவிரவேறில்லாததனாலந்தவிஷயங்களோடுங்கூடினபஞ்சபூதங்களும்பஞ்சேந்திரியங்களாற் கிரிகிக்கப்படுவதாற் பஞ்சேந்திரியங்களைத்தவிரசாக்கிரத்திற்கண்டஜகம்வேறில்லை.

எப்படியெனின்; உலகத்திற் பஞ்சேந்திரியவியாபாரமிருந்தால் ஜகமுண்டு பஞ்சேந்திரிய வியாபாரமில்லாவிடில் ஜகமில்லை அறியப்படாததனால், அந்தப் பஞ்சேந்திரியங்களும் அந்தக்கரணவியாபாரமில்லாவிடிற்பொய்யாய்விடும். இந்தஅந்தக்கரணவியாபாரங்கள் ஜடங்களானதால்த் தாங்களிருக்குங்காலத்திலும் இல்லாதகாலத்திலும் வேறுபடஇருந்து அறிய ஒருஅறிவு அவசியமிருந்தனுபவிக்கப்படுவதாலும், தாங்களில்லாவிடம் அனுபவத்திக்குவருவதாலும் அதையறிந்த அறிவையில்லையென்று ஒருவராலும் நிஷேதிக்கக்கூடாததனாலும் அவ்விதமான அறிவைச்சாக்ஷியெனக்கூறலாம்...*

அந்த அறிவின்சாயாரூபமான அறிவுபோலுள்ள அறிவு அந்தக்கரணவிருத்திகளாகிற கண்ணாடியிற்பிரதிவிம்பிக்க அவ்வந்தக்கரண வியாபாரங்களும் அறிவுபோல்விளங்குகின்றதுகள். அவைக

ளிற்பிரதிவிம்பித்த அறிவைக்கண்ணாடியிற் பிரதி
விம்பித்த முகத்தைமுகமெனக்கூடாததுபோல்அ
றிவெனக்கூடாது.......................................❊

இப்படியாகில் அந்தப்பிரதிவிம்பமுகம் முகம
ன்னியில் விளங்கமாட்டாததுபோல, அந்தப்பிரதி
விம்பமான அறிவும் தனதுவிம்பமான ஸாக்ஷிய
றிவன்னியில் விளங்கமாட்டாது. அவ்விதபிரதிவி
ம்பமான அறிவை நானென்றஞானம் சிவஞான
மாம். அந்தஞானத்தாற்றோன்றுகின்ற சரீரமுதல்
சகலங்களையும் நானென்றும் எனதென்றும் அபி
மானிக்கிற ஞானம் ஸம்ஸாரமாம் ...............❊

☞ இவ்வந்தக்கரணவிருத்தியிற்பிரதிவிம்பி
த்தஞானமே அந்தக்கரணங்களுக்கு அறியும்வல்ல
மையாயிருப்பதாலும், அவ்வந்தக்கரணங்களால்வி
ளங்கிய இந்திரியவியாபாரங்கள் அந்தக்கரணவியா
பாரங்களின் அறியும்வல்லமையான பிரதிவிம்ப
ஞானமன்னியில் விளங்கமாட்டாததனால், அவ்வந்
தக்கரணவியாபாரங்களின் அறியும்வல்லமையான
பிரதிவிம்பஞானமே இந்திரியவியாபாரங்களுக்கு
ம் அறியும்வல்லமையெனச்சொல்லப்படும்......❊

அவ்விந்திரியவியாபாரங்களிற்றங்கிய அறியும்
வல்லமையான பிரதிவிம்பஞானமே, இந்திரியவி
யாபாரங்களால்விளங்கிய ஸகலஜகங்களிலேயும் இந்
திரியங்கள் வியாபித்ததுபோ லுள்ளும்வெளியும்
வியாபித்து ஸகலஜகங்களையும் வெவ்வேறாய்விளங்
குவிக்கின்றது..............................................❊



எப்படியெனின், உலகத்தில் எவ்வளவுசப்தமுண்
டோ அவ்வளவையும் வெகுதூரத்தினின்றும் ஸமீப
த்தினின்றும் காதேகிரகிப்பதினால், சப்தங்களாற்
றோன்றிய தூரமும் ஸமீபமும் அந்தசப்தங்களின்
பொருளாற்றோன்றியபதார்த்தங்களும் காதினால
றியப்படுவதால் அறியுந்தன்மை ஞானமானதாற்
கேட்கிறோமென்றவிருத்தியே அவ்வறிவுக்கு உ
பாதியானதாற் கேட்கிறதென்கிற விருத்தியுடைய
அந்தஞானம் அவ்வளவுதூரஸமீபங்களையும் அந்தச
ப்தங்களின் பொருளால்விளங்கிய பதார்த்தங்களையு
ம் வியாபித்து அறியாநின்ற அறிவாய் விளங்கு
கின்றது.........................................................❊

ஆனாலவ்வளவுதூரஸமீபங்களி லடங்கியவஸ்துக்
களை சிரவணோபாதியுடைய விருத்திஞானம் நிறை
ந்துவியாபித்ததென்ற அநுபூதியின்விபரமெங்ங
னமெனின், ஒருவன்வெகுதூரத்தினின்று சிலவி
ஷயங்களாயுள்ள சுகதுக்கமுடையவசனங்களைகெற்
ஜிக்க அதைக்கேட்டறியாநின்ற சிரவணோபாதியு
டைய விருத்திஞானத்தால் அந்தசப்தங்களோடுங்
கூட எவ்வளவுதூரத்திலிருந்துகெற்ஜிக்கப்பட்டதோ
அவ்வளவுதூரம்வரை சூக்ஷுமமாய் நிதானத்துடன்
வியாபித்து அவ்வளவுதூரத்தையும் அந்தசப்தங்களி
னுள்ளடங்கிய அருத்தரூபமானவஸ்துக்களையுமறி
ந்ததால், அவ்வளவுவிஸ்தாரமுடைய அறியும்வல்ல
மை சிரவணோபாதியுடையஞானத்துக்கிவ்வளவுபூ
ரணத்வமிருக்கிறதென்றநுபவத்துக்குவரும்....❊

☞ இப்படியே ஸகலேந்திரியங்களினாலு மனு
பவிக்கப்படுகின்ற விஷயானுபூதிகளை அந்தந்தஇந்
திரியோபாதிகளுடையஞானத்தால் நிதானித்து வி
யாபித்தனுபவிக்க, அவ்விந்திரியோபாதிகளுடை
ய விருத்திஞானத்தின் பூரணத்வமனுபவத்திக்கு
...........................................※
வரும்..........................................

மனதின்பூரணத்வ மனுபவத்திக்குவரவேண்டி
யனுபவநிரூபணம். ஒருவனொருகாரியத்திலிருக்க
அக்காலத்திலனேகயோஜனதூரமுடைய அதிவி
ஸ்தாரமான ஒருதேசம் அவன்மனதிற்றோன்றஅ
க்காலத்தி லவனருகி லிருக்கின்றவர்களாற் சொல்
லப்பட்ட வசனங்களைக் கிரகிக்கத் தெரியாம
ற்போக, அவர்களதையறிந்து, உன்னுடையமன
ம் எங்கேசென்றிருந்ததென்றுவினவ அதற்கவன்
என்மனங்கீழ்ச்சொன்ன அனேகமாடகூடங்களா
லலங்கரிக்கப்பட்ட ஒருபெரியபட்டணத்திற்போ
யிருந்ததென்றுகூறப்படுவதால், அவ்வித அனுப
வம் மனதிலுதித்தபடியேசோதித்தால் மனதின்பூ
ரணத்வம்வெளிப்படும்.............. ............※

முற்கூறியபட்டணத்திற்பிரவேசித்திராநின்ற
மனம் ஜடமானதால் அதினுள்ளிருந்துவிளங்கிய
சிதாபாசனொருவனில்லாமற்போனால்முன்சொன்
னதேசம் விளங்கமாட்டாது. ஆகையாற்சிதாபாச
னையறியவிபரமெங்ஙனமெனின், ஒருவன்மாடுதப்
பிப்போக அலைதத்தோடிச்சென்றவனைமற்றொரு
வன்சந்தித்து உன்மாடுவெகுதூரத்திநிற்குமென்



று திப்புச்சொல்ல அவனந்தயிடத்திலந்தமாட்டை
ப்பார்த்திருக்கவேண்டுவதுபோல், இவன்மனமதி
தூரமாயுமதிவிஸ்தாரமாயுமுள்ள பட்டணத்தைச்
சார்ந்திருப்பதாய்ச்சொல்வதால் இவனுமவ்விடத்
திலிருந்து அவ்விதபூரணனுய்ப்பவித் தறிந்திருக்
கவேண்டும்.............. .......................※

☞ இவ்விதமாயாலோசித்துத்திரும்பவுமந்த
அனுபவத்தை மனதாலும் மனோபாதியுடைய அ
றிவாலுமறிந் தனுபவித்தால்த் தானங்கேயிருந்த
தும் அங்கேவியாபித்திருந்தோமென்ற மனதினு
டைய பூரணத்வமுந் தன்னுடையபூரணத்வமுந்
தெரியவரும்......................................※

இப்படியே மனம்-புத்தி-சித்தம்-அகங்காரமெ
ன்ற நான்குபாதியையுடைய பூரணத்வமும் வெளி
யாகும். இவ்விதமானசகலவிவகாரானுபூதிகளும் வி
ருத்திஞானமானதன்னை முன்னிட்டனுபவிக்கப்
படுவதால், அவ்விருத்தியுமில்லாத அவஸ்தையு ம
னுபவத்திக்குவருவதால் விருத்தியற்றவிடத்திற்
சிதாபாசனில்லாதவனாகின்றான்...............※

சிதாபாசனென்பதின்பொருள், கண்ணாடியிற்
றோன்றிய பிரதிவிம்பம் விம்பமானமுகத்தினுபா
ஸமானதால் நிருபாதிகஞானமான கூடஸ்தன் அந்
தக்காணவிருத்தியாக்கண்ணாடியிற் பிரதிவிம்பிக்க
அப்பிரதிவிம்பமானஞானம்சித்தான கூடஸ்தனது
ஆபாஸமானதாற் சிதாபாசனெனப்படுகின்றான்※

அவ்விதகூடஸ்தனேதானா, அல்லது சிதாபாச

னுன விருத்திஞானமேதானு, நாமே எல்லாவற் றையுமறிந்து விவகரிப்பதாற்சகலத்தையுமறிந்து விவகரிக்கின்ற சிதாபாசனே நாமாகவேண்டும். அவிவகாரியான கூடஸ்தனை எப்படிநாமென்றனுபவிக்கலாமெனின்? சிதாபாசனில்லாவிடத்தையும் நாமேயனுபவித்துச்சொல்வதாலந்தக்கூடஸ்தனனுபவத்திலகத்தியமொப்பப்படத்தக்கவனுகின்றான். அந்தக்கூடஸ்தனே விருத்தியினுதவியில்லாமற் சகலத்தையுமறியுந்தன்மையுடையவன். அவனையே நாமென்றனுபவத்தாலறியவேண்டும்...........*

அக்கூடஸ்தனுன நம்மைத்தெளியவிவகாராநுபூதியேதெனின்? ஜாக்கிரம்-சொப்பனம்-சுழுத்தி- இந்த அவஸ்தைகளி லிரண்டைநீக்கிமூன்றுவதானசுழுத்தியைப்பார்க்கில், அவ்வவஸ்தையில்விருத்தியில்லாததனுற்சிதாபாசனில்லாதவனுகப்படுகின்றான்

சிதாபாசனில்லாவிடினும்-அஞ்ஞானமிருந்ததாகத்தோன்றுகின்றது. எங்ஙனமெனின், விழித்தவுடன் நானென்றுந்தெரியாமற்சுகமாய்த்தூங்கினேனென்று விவகரிப்பதாற்றேன்றுகின்றது.....*

அந்த அஞ்ஞானஞ்சிதாபாசனையேசாரத்தகும் எங்ஙனமெனில், சிதாபாசனுன் தான் தூங்கியிருந்தால்த் தான் தூங்கியதை யெப்படியறிகுவான், ஆகையாலறிகிறவன் தூங்கமாட்டான் அறியாமற்றூங்கினேனென்று சொல்லக்கூடாது நான் தூங்கினேனென்ற விவகாரஞ் சிதாபாசனிடத்திற்காணப்படுவதால் ஒன்றுந்தெரியாமையான அஞ்ஞானமாஞ்



சுழுத்தியநுபூதி சிதாபாசனையே சாரத்தகும்...*

அச்சிதாபாசனுக்கு அஞ்ஞானம்நேரிட்டதின் காரணமெப்படியெனின்? யாதொருவிருத்தியு ல்லாவிடஞ் சூனியமென்று கூறக்கூடாது சூனிய மென்றாற் சூனியமென்றறியச் சாட்சிவேண்டு சாட்சி சித்தாயிருக்கவேண்டும் அச்சித்தின் சுபா வந் திரிசியத்தை யெதிரிட்டு பார்க்கிறவனுகும், தி ரிசியம் நீங்கினவிடம் பார்க்குமேறுமென்ற வுபாதி யற்ற சுத்த அறிவாம். அவ்வித நிற்குணமான நி விருத்திக் கூடஸ்த சைதன்னியம் நானென்கிற அ கங்கார விருத்தியாங் கண்ணுடியிற் பிரதிவிம்பிக்க நானென்றதின் சுபாவங் கூடஸ்தனென்றறியாமல் அகங்காரவிருத்தியையே நானென்றபிமானித்த தால் நேரிட்டது..................................*

இவ்வஹங்காரவிருத்தி ஜடமானதாலறியா த்தன்மையுடையது. அவ்வஹங்காரத்தி னறியாமையா மஞ்ஞானத்தால் அதிற் பிரதிவிம்பமான தன்னிடத்தில் மேற்கூறிய அஞ்ஞானந்தோன்றத் தானுந் தனது விம்பமான கூடஸ்தனிடத்திலில்லா நின்ற அஹங்காரத்தி னஞ்ஞானமென்றறியாமற் கூடஸ்தனிடத்தி லஞ்ஞானத்தை யாரோபிக்கத் தன்னுலாரோபித்த அஞ்ஞானமாம் திரஸ்கரணியாற் றனது விம்பமான கூடஸ்தனைத் தானென்றறிய வல்லமையில்லாதவனுனன்....................*

திருஷ்டாந்தம் - சிலவிடந் தெளிவுள்ளதாயுஞ் சிலவிடமலினமுள்ளதாயுமிருக்கின்ற ஒரு கண்ணு

டியில் முகம் பிரதிவிம்பிக்கக் கண்ணாடியின் மல
த்தாற்றோன்றியகுறைவைப் பிரதிவிம்பத்திற்கண்
டு அதிற்கண்ட குறைவை விம்பமான முகத்தி லா
ரோபிப்பதுபோலாகும். உள்ளபடி கூடஸ்தனிட
த்தி லறியுந்தன்மை-யறியாத்தன்மை-சூனியத்தன்
மை-அஹங்காரம்-இவ்வளவுமில்லாததனாற் கூடஸ்
த ஞானமாத்திரமாயிருந்தோமென்று, விவேகசு
த்த அஹங்கார தர்ப்பணத்திற்றோன்றிய பிரதிவி
ம்பமான சிதாபாசனை யுள்ளபடிதெளிய, மலமில்
லாக் கண்ணாடியிற் பிரதிவிம்பித்த முகத்தைப்பா
ர்த்து உள்ளபடி விம்பமானமுகம் நிர்மலமென்று
தெளிவதுபோற் றெளியத் தான்தவிர மற்ற ஸர்வ
திருசிய பிரபஞ்சமும் சடமானதா லவ்வித ஜட
மான சகல விவகாரங்களும் நிருவிகாரியான கூ
டஸ்த சைதன்னியமாந் தன்னிடத்திலுண்டாக இட
மில்லாததனால், இரச்சுவிற்றோன்றிய சர்ப்பம் அ
தின் விஷம் அதால்வந்த பயம் மரணம் அதைத் தீ
ர்க்குமந்திர சாமர்த்திய வுபாயங்களிவைகளெல்லா
ம் இரச்சு ஞானாநந்தரம் வியர்த்தமாய் முக்காலத்
திலும் பழுதையைத்தவிர வேறில்லையென்று பழு
தைமாத்திரமாய்த் தெளிவதுபோல், நிர்விகார கூ
டஸ்த சைதன்னியமாத்திரமாய்த் தெளிந்துநிற்க
சிதாபாசனும் நிர்விகாரியாயிவிட்டதால் விகாரம்
நீங்கினவிடங் கூடஸ்தனானதினாற் சிதாபாசனு மதி
னுபாதியான சுத்தாஹங்காரமும் நிர்விகாரியாய்
விடத்திரியும்.................................*



அவ்வந்தக்கரணத்தின்சுபாவம் விகாரமானதால்
விகாரமற்றவிடம் நிர்விகாரமானதாற் சுத்தமுடை
ய கற்பூரமலை யக்கினிப்பட்டெரிய அக்கினியுங் கற்
பூரமுமெரிந்து ஆகாயமாத்திரமாய்விடுவதுபோ
ல், இரண்டும் முக்காலத்திலு மில்லாததாய் நசித்து
க் கூடஸ்தமாத்திரமாய் மிஞ்சும்..................*
இவ்விதமாய்ச் சுருதி யுக்தி அனுபவங்களோடு
ங்கூட உள்ளபடியறிந்து சமாதிசெய்ய, ஸ்வாநுபூதி
பெலத்தால் முக்தனாவான். மென்மேலும் ஸ்வாநு
பூதிபெலத்தால் முக்தனென்ற விவகாரமும் பெத்
தனென்ற விவகாரத்தால் வந்ததால் முக்காலத்திலு
ம் நம்மிடத்திற் பந்தம் வராமலிருக்க முத்தியுஞ்
சமாதி பெலத்தால் ஞானமும் நீங்கினதுபோல் நீங்
காமல் நீங்கிவிடும்..............................*
கூடஸ்தனது சுபாவம்-அவஸ்தை மூன்றிற்
கண்ட ஸகலஜகத்துக்குஞ் சாக்ஷியாயிருந்ததுபோ
ல், ஸகுணேசுவரத்தியானம் நிர்க்குணபரிபூரணத்
தியானம் அதற்குஞ் சாக்ஷியாய்நின்ற பூரணத்து
க்கும் பூரணமான பார்வை அந்தப்பார்வையும் நீங்
கிய விருத்தியில்லாத ஸ்வாத்மானுபவஸ்திதி இவ்
வளவுங் கூடஸ்தனான தன்னால் விளங்குவதால், ஜா
க்கிரமுத லதீதசமாதிவரையிலுந்தானே நிர்விகார
கூடஸ்த ஞானத்தா லறிந்தவனாகின்றான்......*
☞ இவ்வித கூடஸ்தஞானமில்லாமற்போனால்
நமக் கவஸ்தாத்திரயஞ் சித்தியாகாததுபோல்,
ஈஸ்வரனுக்கும்-சிருஷ்டி-ஸ்திதி-சம்ஹாரம்- சித்தி

யாதி. கூடஸ்தன் நிர்குணனானதால் நிர்விசேஷனுவான் நிர்விசேஷனிடத்தில் விசேஷமொப்பக்கூடாது. சுருதி யுக்தி யனுபவங்களினால் எங்குங் கூடஸ்தன் வியாபித்திருப்பதாய்த் தெரிவதால், வீடுகடோறும் வியாபித்த ஆகாயத்தை ஒருவராலும் என்வீட்டாகாயம் உன்வீட்டாகாயமென்று பேதித்துப் பின்னமாகச்செய்ய வுபகாரப்படாததுபோல், பேதிக்க வுபகாரப்படான் .... ... .........*

சிருஷ்டிக்கிமுன்னும் பின்னும் பிரளயத்திக்குப்பின்னும் அழியாமலிருந்து இம்மூன்றையுமறிந்தவனே கூடஸ்தப்பிரமமாவான். அவ்வித தத்பத கூடஸ்தனுக்கும், அவஸ்தாத்திரய ஸாக்ஷி லக்ஷ்யதன்னியமாயுக் கூடஸ்தஸ்வாபாவமாயுமிருக்கின்ற நமக்கும், ஸாக்ஷிரூபமாயாவது ஞானரூபமாயாவது பேதம் நிரூபிக்கத்தகாததனுற், பேதமற்றது ஏகமானதாலவ்வித ஏகனை நம்மைத்தவிர மூக்காலத்திலுமன்னியமில்லையென்று தெளியாமற்றெளிய அக்கணமே உண்மை வெளியாம். இவ்விதவுண்மையையடைந்தவனைச் சுருதிகள் பிரமமென்று மங்களபேரிகையடிக்கின்றன.—முற்றிற்று........*

வாழி.

அண்டர்மாமுனிவர்வாழி-யருமறையக்கம்வாழி—தொண்டரும்வாழியிந்நூற் - றெருத்தனர்வாழிமற்றும்—எண்டிசையுலகினுள்ளோ-ரியாவரும்வாழியிந்தத்—தண்டமிழ்ப்படிப்போர்கேட்போர் - சந்ததம்வாழிதானே.' ......................*



| பக்கம் | வரி | பதம். | பொருள். |
|---|---|---|---|
| ருஉ | உச | அதிஷ்டகரணோத்பன்னமான. | தோஷமன்றிய இந்திரியத்தாலுண்டான. |
| ௱உஅ | உ | அந்தரஜிக்வை. | உண்ணாக்கு. |
| ௱உரு | உரு | அஸ்பந்தஸ்பந்தமுடைய. | அசையாமலசைதலுடைய. |
| ௱உஉ | ச | அபிவியஞ்சியாபிவிபஞ்சக. | விளக்கிப்பிக்கப்படுகை- விளக்கிப்பிக்கின்றதாக. |
| ௱உச | ரு | அனுச்சாரிதவர்னன. | உச்சரியாமல்விளங்கியசத்தம். |
| ௱உரு | அ | ஆவிற்பாவமே. | தோற்றுகையே. |
| ௱உ௰ | ௰ | இதந்தையெனும். | இதுவென்றவிருத்தி ஞானமெனும். |
| சச | உஉ | உத்போதகமாகும். | போதிப்பிக்கும்வல்லமையுடையதாகும். |
| சக | ௰ரு | கம்புக்கிரீவாதிமற்றுயுள்ள. | அடிபல்கைதிருகைமுதலானதின் வியாபாரக்களை யுடைத்தாயுள்ள. |
| ௱உஎ | ௰ரு | கிராஹகிராஹகமாக. | கிரகிக்கப்படுகின்றதாயும் கிரகிக்கின்றதாயும். |

| பக்கம் | வரி | பதம். | பொருள். |
|---|---|---|---|
| ாஉச | யக | கிரியாசம்புடித. | கிரியையின்சேர்க்கையுடைய. |
| ாஉச | உஉ | கிரியாக்ஷுப்த. | கிரியையினுற்கலங்கப்பட்ட. |
| ருஉ | உரு | கோடித்வயத்தை. | சுத்திகையொவிரசதமோ வென் [றவிரண்டுசக்ஷியை |
| ாஉரு | யரு | சங்கோசவிகாச. | குவிதல்விரிதல் |
| ாஉரு | யரு | ஜகத்சத்தாசூனியமான. | சகத்தின்விளங்குதலின்றிய |
| சரு | கூ | தனதில்ஸ்புரணமுமற்று. | தனதிவிளங்குதலின்தடிப்புமின் |
| ாஉஅ | உக | தஹரமத்தியம. | சூக்குமமத்தியம. [றி. |
| ாஉச | யக | தாதுவாகாத. | இருகன்னத்தினுண் மாங்கிஷவர |
| ாஉகூ | கூ | திரோதானமே. | மறைந்திடுதலே. [சுதல். |
| சரு | உரு | பிரதமபரிஸ்பந்தமான. | முந்தியவிளங்குதலான அசைவு. |
| சரு | உகூ | மனோபகிதஞானம். | மனதின் தன்மையில் விளங்கிய [ஞானம். |



| பக்கம் | வரி | பதம். | பொருள். |
|---|---|---|---|
| ருரு | ச | யோக்கியானுபலப்தி. | சரியானகாரணமுடைய இல்லா [மையின்கிரகணம். |
| ாஉரு | ய | லோகிதவர்ன்ன. | சிகப்புவர்ன. |
| சஅ | அ | வியாப்த. | வியாபிக்கப்பட்ட. |
| ாஉகூ | கூ | வியாப்தி. | நினைவு. |
| ாஉரு | ச | வியாகிருத. | தொழிலுக்குட்பட்ட. |
| ாஉஎ | உச | ஸ்புரணவிசேஷ. | விளங்குதலின் தடிப்பு. |
| ாஉகூ | கூ | ஸர்வோபரம. | யெல்லாவற்றின்னெழிவு. |
| ாருக | யச | ஸஜாதியபேதசூசகவஞ்சுஜிப்த. | ஸமானஜாதிபேதத்தை கோட் சொல்லானென்றும் ஆக்ஷேபி க்காமலிருக்கின்ற. |
| ாஉஅ | உய | ஹிருதயகுஹரம். | குகை. |

பதப்பொருளகராதி-முற்றிற்று.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | ௯ | விவகார. | வ்யகார. |
| ௯ | ௭ | அச்கியின். | அக்கினியின். |
| ௰௨ | ௰௨ | குளந்தாய். | குழந்தாய். |
| ௩௪ | ௫ | பிரகிறுதி. | பிரகிருதி. |
| ௩௩ | ௮ | ஜடமென்றும். | பந்தமென்றும். |
| ௩௭ | ௨௩ | ஞத்வஸ்தி. | ஞத்மவஸ்தி. |
| ௩௯ | ௯ | ஸச்சிதானந்தம்-என்று. | சச்சிதானந்தம் ஜீவதத்துவம்-என்று. |
| ௩௯ | ௮ | சமபந்தராகிசத்தியம். | சம்பந்தராஹித்தியம். |
| ௪௰ | ௰ | சொல்லட்டும். | சொல்லப்படும். |
| ௪௫ | ௰௪ | கேவலாஸ்தைகள். | கேவலாவஸ்தைகள். |
| ௪௫ | ௨௧ | சத்திருப. | சத்ருப. |
| ௪௮ | ௰௮ | விசேஷசகால. | விசேஷசமகால. |
| ௪௯ | ௰௨ | சச்தியின்பொருட்டு. | சித்தியின்பொருட்டு. |
| ௫௮ | ௰ | காரணக்கூடாதிகாரண. | கரணக்கூடாதிகரண |



| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫௧ | ௪ | பிரர். | பிரற் |
| ௯௰ | ௰௭ | பகிரிந்திரியம்பிரத்தியக்ஷ. | பகிரிந்திரியப்ரத்யக்ஷ. |
| ௯௪ | ௩ | சம்பலமாகி. | கம்பலயமாகி. |
| ௭௨ | ௨௰ | ஆறற். | ஆறல். |
| ௮௪ | ௰௧ | வரலாறாயும். | வரலாறையும். |
| ௯௨ | ௰௮ | பிரமானந்தகோச. | பிரமானந்தமயகோச. |
| ௱ | ௨௰ | பசுவாஞ்சிவ. | பசுவாஞ்சீவ. |
| ௱௩ | ௰௩ | வர்ணம். | வருணம். |
| ௱௪ | ௰௪ | தோன்றியபரோக்ஷ. | தோன்றி-யபரோக்ஷ. |
| ௱௫ | ௰௮ | அளிவற்று. | அழிவற்று. |
| ௱௯ | ௮ | அனுஷ்டிக்க. | அநுஷ்டிக்க. |
| ௱௧ | ௨ | லவஹித்தி. | லயித்தி. |
| ௱௧ | ௯ | இருந்தியிப்போது. | இருந்துமிப்போது. |
| ௱௰௨ | ௯ | மனுஷ்யர்ள். | மனுஷியர்கள். |

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௱௰௫ | ௨௫ | பிரவேசித்துதனது. | பிரவேசித்ததனது. |
| ௱௨௪ | ௨௬ | செடாநின்ற. | கொடாநின்ற. |
| ௱௨௬ | ௨௧ | னமித்திக. | னத்திக |
| ௱௬௰ | ௨௪ | னமித்திக. | னத்திக. |
| ௱௬௰ | ௰ | சுத்தமாத்திரா. | சுசமாத்ரா. |
| ௱௬௪ | ௨௰ | தெரியும். | திரியும். |
| ௱௬௬ | ௰௬ | ப்பவிக்க. | ப்பிரிக்க. |
| ௱௪௰ | ௨௧ | சரீரவனை. | சரீரவானைய். |
| ௱௪௨ | ௪ | ஜகம்நித்தியம். | ஜகமனித்தியம். |
| ௱௫௰ | ௨௫ | தோடி. | தேடி. |



